# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 31.05.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

ஜில் ஸ்பெஷல்!





சாதித்தது என்ன?

கம்மி மார்க்கா? கவலை வேண்டாம்!

# கல்கி



31.05.2009

## 'ஜில்' ஸ்பெஷல்


ஸ்டார் ஜில் ........ 06
'ஜில்'லுன்னு ஒரு டூர் ........ 18
மனசுக்கு 'ஜில்' ........ 22
'ஜில்' பயணம் ........ 56
'ஜில்' ரெஸிபி ........ 90


உதகை மாவட்ட வாசகர்களுக்கு நடுப்பக்கத்தில் கூப்பன்

சினி நியூஸ்

ராஜபாளையத்தில் தனித்தனி கனவுகளோடு வாழும் மூன்று இளைஞர்களைப் பற்றிய கதைதான் 'நாடோடிகள்'. இதில் முதலில் சேரன் நடிப்பதாக இருந்ததாம். அவர் பொக்கிஷத்தில் பிஸியாக இருப்பதால் சசிக்குமார் கைக்கு வந்துள்ளது. கதையின் நாயகர்களில் ஒருவர்! இயக்கம் சமுத்திரக்கனி. ''மறைந்த இயக்குநர் ஸ்ரீதர் அவர்கள், அதன் பிறகு இயக்குநர் சிகரம் மற்றும் இமயம் இவர்களுடைய விதைகள்தான் இன்று மரங்களாகி இருக்கின்றன. ஏறக்குறைய நாற்பத்தைந்து வருட உழைப்புக்குப் பிறகே தமிழ் சினிமா மாறத் தொடங்கியிருக்கிறது'' இது இயக்குநர் பற்றி சேரனின் கமெண்ட். சங்கர் மகாதேவன் குரலில், 'சம்போ சிவ சம்போ'வும், ஹரிஹரன் குரலில், 'உயிரில் பூக்கும் காதலும்...' பேசப்படும் பாடல்களாக இருக்கலாம். சுந்தர் சி. பாடிவிடமிருந்து மற்றொரு அற்புதமான இசைத் தாலாட்டு!

அடுத்தவனுடைய கஷ்டத்தைப் புரிந்துகொண்டு அதைத் தீர்க்கும் எவருமே கடவுள்தான். இந்தத் தத்துவத்தின் அடிப்படையில்தான் தமது 'கந்தசாமி' திரைப்படத்தை உருவாக்கியிருக்கிறார் இயக்குநர் சுசி கணேசன். அத்தோடு படத்தின் பின்னணி இசையாக வரும் சேவல் சப்தத்தை தன் சொந்தக் குரலில் டப்பிங் செய்தும் கொடுத்திருக்கிறார்.

படத்தில் ஸ்ரேயா அணியும் நான்கு லட்சம் மதிப்புள்ள ஷூவும், அறுபது




* 'நாடோடிகள்' படத்தில்...



* 'கந்தசாமி'யில் விக்ரம்

கிலோ மீட்டர் வேகத்தில் பறக்கும் பஸ் போன்றவையும் கூட படத்தின் கதாபாத்திரங்களாக நடிக்கின்றனவாம்!

இதில் நடிகர் விக்ரமுக்கு இளம் ஆபீஸர் கெட்டப்பாக இருப்பதால் 'பீமா'வில் ஊதிய உடம்பைத் தடாலடியாகக் குறைத்து, இளைத்து இருக்கிறார்.

படத்தில் மொத்தம் எட்டு பாடல்கள். பெரும்பாலான பாடல்களுக்கு நடனம் ஆட அழகிய இத்தாலியப் பெண்கள் இந்தியா வந்திருக்கின்றனர். சீயானை தமிழிலும், தெலுங்கிலும் நான்கு பாடல்கள் தமது சொந்தக் குரலில் பாட வைத்திருக்கிறார் தேவிஸ்ரீ பிரசாத்.

**- கிராபியென் ப்ளாக்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் : **சீதா ரவி**

உதவி ஆசிரியர்கள் :
**கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன்,**
**பா.கோபால்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் : 044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள் :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : ரூ.3,800/-

**Bharathan Publications**
**Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.



இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.



# கம்மி மார்க்கா? கவலை வேண்டாம்!

"என்னோட பையன் பாஸ்" என்றதும், அடுத்து வரும் கேள்வி, "எவ்வளவு மார்க்?". இங்கே மதிப்பெண்ணை வைத்துத்தான் எல்லாமே.

அப்படியென்றால் மதிப்பெண் குறைவாக வாங்கிய மாணவர்களுக்கு வேறு எந்த வாய்ப்புமே இல்லையா? இருக்கிறது. ஒன்றல்ல... இரண்டல்ல...பல நூறு வாய்ப்புகள் இருக்கின்றன.

உங்களுக்காக ஒரு சில அறிமுகங்கள்...

★ காலம்காலமாக மருத்துவத்துக்கு இணையாக 'நோபிள் ப்ரொஃபஷன்' என்று மதிக்கப்பட்டுவரும் சட்டத்துறையைக் குறித்து மாணவர்கள் அவ்வளவாக அறிந்துகொள்வதில்லை. முன்பெல்லாம் பட்டப்படிப்பு முடித்தவர்கள்தான் சட்டக் கல்லூரியில் சேரமுடியும். ஆனால் இப்போது பன்னிரண்டாம் வகுப்பு முடித்தவுடனேயே நேரடியாக சட்டம் படிக்கலாம். ஒருங்கிணைந்த ஐந்தாண்டுப் படிப்பில், மூன்றாண்டுகள் முடிந்தவுடனேயே பி.ஏ. பட்டம் வழங்கப்படுகிறது. இப்பட்டத்தைக் கொண்டு, படிக்கும்போதே அரசுப் பணிகளுக்கான போட்டித் தேர்விலும் பங்குபெறலாம்.

படித்து முடித்தவுடனேயே நீதித்துறைப் பணிகளுக்கான தேர்வுகள் எழுதவும் இப்போது வகைசெய்யப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட வருடங்கள் தொழிலில் பயிற்சி பெற்றிருக்க வேண்டும் என்ற முந்தைய நடைமுறைகள் சமீபகாலமாகத் தளர்த்தப்பட்டு வருகின்றன.

★ பத்தாம் வகுப்புக்குப் பிறகு மறந்தே போய்விட்ட வரலாறு, புவியியல், பொருளாதாரம் போன்ற பாடங்கள்தான் 'எவர் க்ரீன்'. இவ்வகையான அடிப்படைப் பாடங்களில் இளங்கலைப் பட்டம் பெற்றபிறகு, இந்தியாவின் மிக உயர்ந்த,

# புதிய பாக்கேஜ் நூல் விற்பனை! 200 குலுக்கல் பரிசுகள்!! முந்துக!!!

புத்தக ரசிகர்கட்கு ஒரு வரப்பிரசாதம். கவியோகி (யோகியார்) வேதம் அவர்களின் கீழ்க்கண்ட 4 நூல் பாக்கேஜ் - மொத்தமும் வாங்குவோருக்கு மிக்ஸி, புக் ஸ்டாண்ட், உயர்ந்த கண்ணாடிகள், நவராத்திரிக் கொலு பொம்மைகள் போன்ற விலை உயர் - 200 பரிசுகள் (குலுக்கலில்) காத்திருக்கின்றன. திரு.கார்த்திகேயன், எல்.கே.எம். பப்ளிகேஷன்ஸ், 33/1, ராமநாதன் தெரு, தி.நகர், சென்னை - 600 017. (போன் : 24361141) அவர்களுக்கு நேரிலோ அல்லது அவர்கள் பெயரில் எம்.ஓ. ரூ.200/- அல்லது செக் அனுப்பி, தெய்வீக அருள்வாக்குப் பெற்ற கவியோகியாரின் கீழ்க்கண்ட - 4 நூல்கள்

1. **எளிய யோகாசனங்கள் - விலை ரூ.50/-**
2. **போகமும் யோகமும் - விலை ரூ.40/-**
3. **ஸ்ரீகாஞ்சி மாமுனிவர் (அஞ்சலி) - விலை ரூ.50/-**
4. **கவியோகி கவிதைகள் - விலை ரூ.50/-**

ஆக மொத்தம் ரூ.200. (190 + கூரியர் ரூ.10) இவற்றை வாங்கி மறக்காமல் டோக்கன் (ஒரு பிரதியை) வைத்துக் கொள்ளவும். உரிய நேரத்தில் மேற்கண்ட பரிசு குலுக்கல் அறிவிக்கப்படும்.

விவரத்துக்கு திரு.கார்த்திகேயனை போன் : 044-24361141-ல் தொடர்பு கொள்க. சில பிரதி பாக்கேஜ்-களே உள்ளன.

**முந்துங்கள். தனித்தனி நூல் விற்பனை இல்லை.**


● கவியோகி வேதம்

கே.கார்த்திகேயன், (நல்ல ஆன்மிக, இலக்கிய நூல் வெளியீட்டாளர்கள்), எல்.கே.எம். பப்ளிகேஷன்ஸ், புது எண் : 33/4, ராமநாதன் தெரு, தி.நகர், சென்னை - 600 017.


பாரம்பரியமான கல்வி நிறுவனங்களில் மேற்படிப்புக்காகச் சேரமுடியும். முது கலைப் பட்டத்தில் படிக்கும்போதே யு.ஜி.சி. நடத்தும் ஆய்வு உதவித்தொகைக்கான தேர்வையும் எழுதலாம். அந்தத் தேர்வில் வெற்றி பெற்றுவிட்டால் மாதாந்திர உதவித்தொகை வழங்கப்படுவதோடு, கண்டிப்பாக முன்னணி கல்வி நிறுவனத்தில் விரிவுரையாளராகப் பணியாற்றலாம்.

அரசுக்கல்லூரிகளில் மிகக்குறைவான கட்டணத்தில் இந்த அடிப்படைப் பாடங்களைப் படிப்பவர்கள்தான், இந்தியாவின் மிக உயர்ந்த பதவியாகக் கருதப்படும் சிவில் சர்வீஸ் தேர்வுகளிலும் அதிகளவில் வெற்றிவாகை சூடிவருகிறார்கள்.

★ 'இதெல்லாம் எனக்கு ரொம்ப போர்' என்று அலுத்துக் கொள்கிறீர்களா? உங்களுக்கும் வாய்ப்புகள் ஆயிரம்.

இசையா... நடனமா... ஓவியமா... இல்லை சினிமாவா? அதையும் ஒரு பாடமாக எடுத்துப் படிக்கலாம். அனைத்துக் கலைகளுக்கும் தமிழக அரசே தனிக் கல்லூரிகளை நடத்திவருகிறது. கலைத் துறையில் உங்களுக்கு ஆர்வமும் முயற்சியும் இருக்கும்பட்சத்தில், நீங்கள் பிரபலமான நட்சத்திரமாவது உறுதி.

**மிகக் குறைவான கட்டணத்தில் அடிப்படைப் பாடங்களைப் படிப்பவர்கள்தான், அதிக அளவில் வெற்றிவாகை சூடுகிறார்கள்.**

★ சமையற்கலை மற்றும் உணவக மேலாண்மைப் படிப்புகளுக்கும், சுற்றுலா நிர்வாகப் படிப்புகளுக்கும்கூட உடனடி வேலை வாய்ப்புகள் காத்திருக்கின்றன. புதுமையான எண்ணங்களை உருவாக்கும் கற்பனைத்திறன் உங்களிடம் இருக்கும் பட்சத்தில் புகழ்பெற்ற நிர்வாகியாக, தொழில் முனைவோராக ஜொலிப்பதும் உறுதி.

- ஸாந்த்

"இந்த சம்மரை எப்படி சமாளிச்சீங்க? எங்கே ரவுண்டடிச்சீங்க?" என்ற கேள்வியுடன் சில பிரபலங்களைப் பிடித்தோம்.

* ஜாலி சம்மர்

**காமெடி நடிகர் பாஸ்கர்:**

"இந்த சம்மருக்கு இடைவிடாத ஷூட்டிங் இருந்ததால எந்த ஊருக்கும் போக முடியலை. என் மகள் ஐஸ்வர்யா இந்த வருஷம் பத்தாவது போறா. அதனால பத்தாவது வகுப்பு பாடத்தை இப்பவே படிக்க ஆரம்பிச்சுட்டா. மகன் ஆதித்தனும், 'டாடி, ஊட்டி, கொடைக்கானல்னு போக வேண்டாமே. பேசாம வீட்ல ஏர்கண்டிஷனை ஆன் பண்ணிட்டு இருந்துடறோம்'ன்னான். நானும் செலவு மிச்சம்னு நினைச்சு ரொம்ப சந்தோஷப்பட்டேன். ஆனால், கரண்ட் பில்லைப் பார்த்ததுக்கப்புறம் தான் பேசாம இதுக்கு ஊட்டி, கொடைக்கானல்னு போயிருக்கலாமேன்னு தோணுச்சு. ஏ.ஸி. மிஷின்ல இருந்து வர்ற வெப்பத்தை விட என் வயித்துல இருந்து வந்த வெப்பம்தான் அதிகம்."

**விஜய் ஆதிராஜ் :**

"என் மனைவி பல வருஷமா சம்மர்ல டூர் கூட்டிப் போகச் சொல்லி

# ஆலப்புழா

கேட்டுக்கிட்டிருந்தாங்க. சிம்லா, டார்ஜிலிங்ன்னு கேட்க ஆரம்பிச்சு ஏலகிரி வரைக்கும் இறங்கி வந்துட்டாங்க. இந்த வருஷம் மட்டும் நீங்க என்னை டூர் கூட்டிட்டுப் போகலைன்னா உங்களை டைவர்ஸ் பண்ணிடுவேன்னு ஒரு போடு போட்டாங்க. உடனே சிங்கப்பூருக்கு டிக்கெட் புக் பண்ணிப் பறந்தோம். நாங்க ஹனிமூன் கொண்டாடிய இடம் சிங்கப்பூர். அதனால சென்டிமென்டா மனைவிக்கும் பிடிக்கும். என் இரு மகள்களுக்கும் சிங்கப்பூர் ரொம்பப் பிடிச்சிருந்தது. என் மனைவிக்கு அவங்க எதிர்பார்த்ததை விட டூர் பிரமாதமா அமைஞ்சதுல ரொம்ப சந்தோஷம்.''

**ஜேம்ஸ் வசந்தன் :**

''நான் ரொம்ப வருஷம் கொடைக்கானல்ல மியூசிக் டீச்சரா வேலை பார்த்தேன். நான் வாழ்ந்த இடமே கோடை வாசஸ்தலமா இருந்ததால ஹில் ஸ்டேஷனுக்குத்தான் டூர் போகணும்ன்னு எண்ணம் இல்லை. இந்தத் தடவை சிங்கப்பூர் டூர் போனேன். இது ரெஃப்ரெஷ்ன்னு சொல்றதை விட எஸ்கேப்னு சொல்லலாம். நிறைய படங்கள் கமிட் ஆகி வொர்க் பண்றப்ப, இப்படி டூர் போறது எஸ்கேப் ஆகுற மாதிரிதான்னு தோணுது. சிங்கப்பூர் மாதிரி அழகா சுத்தமா நம்ம சென்னையும் வரணும்ன்னு நினைக்கிறேன். என் கனவு நனவாகும் நாள் எப்ப வருமோ?''

**சரண்யா மோகன்:**

''ஐயோ சார் போன வருஷம் சம்மர்ல




* ஃப்ளாப் ப்ளான்

வெண்ணிலா கபடி குழு' ஷூட்டிங்குக்காக பழனியில் இருந்தேன். என்னால பழனி வெயிலைத் தாங்கவே முடியலை. முகமெல்லாம் கறுத்துப் போயிடுச்சு. மறுபடியும் சரியாகறதுக்கே சில மாதம் ஆயிடுச்சு. ஆனால் இந்த வருஷம் சம்மருக்கு முன்னாடியே ஷூட்டிங்கெல்லாம் முடிஞ்சது. அதனால எங்க சொந்த ஊரான ஆலப்புழாவுக்குப் பக்கத்துல இருக்கற போட் ஹவுஸில் நண்பர்களோடும், அப்பா-அம்மா, மற்ற உறவுக்காரங்களோடும் ஜாலியா இருந்தேன். இந்த என்ஜாய்மென்ட் மறுபடியும் ஷூட்டிங் போறப்ப புது எனர்ஜியைக் கொடுக்கும். ஒவ்வொரு சம்மரும் இப்படியே இருந்தா சூப்பரா இருக்கும்.''

**நா. முத்துக்குமார் (பாடலாசிரியர்):**

''நாம ஏன் வெயிலைப் பார்த்து

# சரண்யா குழு

பயந்து ஓடறோம்னு தெரியலை. நாம வெப்பமான நாட்டில் பிறந்தவர்கள். வருடத்தில் பெரும்பாலான நாட்களில் நிலவும் வெப்பம் குறிப்பிட்ட இரு மாதங்களில் அதிகமாகிறது. அவ்வளவுதான். எப்போதும் நம்மோடு இருக்கும் நண்பனாக வெயிலைப் பார்த்தால் பிரச்னையில்லை.

'வெயிலோடு விளையாடி, வெயிலோடு உறவாடி'

என்ற வரிகளை நினைவில் வைத்துக் கொண்டால் கொளுத்தும் கோடையும் வசந்தமாகும்.''

- ராகவ்குமார்



* ஃப்ளாஷ்பேக் ட்ரிப்



* எஸ்கேப் டூர்



* வெயிலோடு உறவாடி

# ஜில் ஜில் மியூசியம்



ஐஸ்க்ரீம் பார்லருக்கு அழைத்துச் சென்றாலே, உங்கள் பர்ஸை 'உண்டு இல்லை' என ஆக்கி விடும் குழந்தைகளை ஐஸ்க்ரீம் மியூசியத்துக்கே அழைத்துச் சென்றால்...?

வெரைட்டியான ஐஸ்க்ரீம்களோடு, அவை குறித்த 'ஜில்' தகவல்களும் கண்கவர் வண்ணத்தில் செதுக்கப்பட்டுள்ளன. எங்கே? நொய்டாவில் இருக்கும் இந்தியாவின் ஒரே ஐஸ்க்ரீம் மியூஸியத்தில்தான்.

கையில் க்ளவுஸ், தலையில் தொப்பி சகிதம் சம்மருக்கு ஏற்ற குளிரான அறையில் ஏகப்பட்ட ஐஸ்க்ரீம்களுக்கு நடுவில் ஜம்மென நிற்கலாம். உங்கள் இஷ்டம் போல நீங்களே ஒரு புதிய ஐஸ்க்ரீமைத் தயாரியுங்கள் என குழந்தைகளின் கையில் பெரிய ஸ்பூன்களையும், க்ரீம்களையும் கொடுத்து கொண்டாட விடுகிறார்கள்.

சாக்லேட் ஐஸ்க்ரீம்தான் உங்கள் ஃபேவரிட்டா அப்படியென்றால் நீங்கள் துடுக்கானவர். வெனிலாதான் பிடிக்குமா? நீங்கள் உண்மையானவர். ஸ்ட்ராபெர்ரிதான் உங்கள் உள்ளம் கவர்ந்ததா? நீங்கள் கலை ஆர்வம் மிக்கவர்கள்.

நாங்கள் சொல்லவில்லை. ஐஸ்க்ரீம் மியூஸியத்தில்தான் இந்த ஆரூடமும் தருகிறார்கள்.

நொய்டாவுக்கு ஒரு 'ஜில்' ட்ரிப் போறீங்களா?

- நளினி சம்பத்குமார்



# கூட்டிக் கழிச்சுப் பார்த்தா...

கல்கி 17.5.2009 இதழில் நாம் எழுதிய படியே இழுபறியானது சிதம்பரத்தின் நிலை! முதலில் ராஜகண்ணப்பன் வெற்றி பெற்றதாக அறிவித்து, பிறகு மாறியதும் அதிர்ந்து போனார்கள் அ.தி.மு.க.வினர். என்ன நடந்தது? காரைக்குடியில் வோட்டு எண்ணிக்கையின்போது உடனிருந்த பத்திரிகை நிருபர்கள், அ.தி.மு.க. பிரமுகர்கள் ஆகியோரிடம் பேசினோம்.

''காலை பத்து மணி அளவில் கண்ணப்பன் திருப்பத்தூர், சிவகங்கை, மானாமதுரை சட்டமன்றத் தொகுதிகளில் முன்னணியில் இருந்தார். சிதம்பரம், காரைக்குடி, திருமயம், ஆலங்குடி ஆகிய தொகுதிகளில் முன்னணியில் இருந்தார். மொத்தத்தில் கூட்டிக் கழித்துப் பார்க்கும்போது, கண்ணப்பன் 3900 வாக்குகள் முன்னணியில் இருந்தார். அந்தச் சமயம் பார்த்து கண்ணப்பன், 'கோயிலுக்குச் சென்று வருகிறேன்' என்று வெளியே சென்று விட்டார். பின்னர் பன்னிரண்டரை மணிக்கு வெற்றிச் சான்றிதழ் வாங்க வந்த கண்ணப்பனிடம், 'கொஞ்சம் பொறுங்கள். ஆலங்குடியில் 8890 வோட்டுக்கள் சிதம்பரம் அதிகம் பெற்றிருக்கிறார். மறுபடி கூட்டிக் கழித்துப் பார்த்ததில் 3354 வோட்டுகள் அவர் அதிகம் பெற்று வெற்றி பெற்றதாகத் தெரிகிறது' என்று சொல்லிவிட்டார் மாவட்ட ஆட்சியாளர்'' என்கிறார் பிரபல தினசரியின் நிருபர்.

''ஒன்பதரை மணிக்கு கவுண்டிங் சென்டரிலிருந்து வெளியே வந்த கண்ணப்பனுக்கு, காவல் கண்காணிப்பாளர் கூட வாழ்த்து தெரிவித்துப் பாராட்டினார். ஆலங்குடி வோட்டுக்கள் மேஜைக்கு மேஜை எண்ணி முடித்து அறிவிக்கும்போது எங்கள் பிரதிநிதிகள் சரியாகவே குறித்து வந்தார்கள். ஆனால், நாங்கள் குறித்தது தவறு என்று அதிகாரிகள் சொல்கிறார்கள். அவர்கள் ஒரு கணக்கு காண்பிக்கிறார்கள். 'மறு கூட்டலுக்கு ஏற்பாடு செய்யுங்கள்' என்று நாங்கள் கேட்டபோது, 'அதற்கு அவசியம் இல்லை' என்று தன் தனிப்பட்ட உரிமையைப் பயன்படுத்தினார் மாவட்ட ஆட்சியாளர். இடைப்பட்ட நேரத்தில் அவருக்கு தில்லி, சென்னை, மதுரை ஆகிய இடங்களிலிருந்து ஏகப்பட்ட தொலைபேசி அழைப்புகள். மொத்தத்தில் இந்த ஆட்டத்துக்கு அரசு ஊழியர்களும் உடந்தையாக இருந்தார்கள்'' என்கிறார் அ.தி.மு.க. முக்கியப் பிரமுகர்.

இதற்கிடையில் ''நீதிமன்றம் போகலாமா?'' என்று கண்ணப்பன் ஜெயலலிதாவைக் கேட்க, ''வேண்டாம். நீதிமன்றத்தில் எப்படி தீர்ப்பு வரும் என்று தெரியாது. இப்போது மக்கள் சிதம்பரத்தின் வெற்றி குறித்து சந்தேகிக்கிறார்கள். அதே நிலை நீடிக்கட்டும்'' என்று சொல்லி விட்டாராம்.

**- கௌசி**

கால்பந்தில்தான் தேசிய அணிகளுக்குச் சமமாக கிளப்புகளும் நல்ல புகழில், அதிக வருமானத்தில் புழங்கிக் கொண்டிருக்கும். இன்று தென் ஆப்பிரிக்காவில் சென்னை சூப்பர் கிங்ஸ், ராஜஸ்தான் ராயல்ஸ், பஞ்சாப் லெவன் அணிகளுக்கு என்று தனியே ரசிகர் பட்டாளம் உருவாகியிருப்பது ஓர் இந்திய உள்ளூர் போட்டிக்குக் கிடைத்த மிகப்பெரிய சர்வதேச அங்கீகாரம். இது மோடியின், பி.சி.சி.ஐ.யின் பெரிய வெற்றி. ஐ.பி.எல். நடந்த சமயத்தில் இங்கிலாந்தில் மழைக்கு நடுவே (மேற்கு இந்தியத் தீவுக்கு எதிரான) டெஸ்ட் மேட்ச் ஒன்று நடந்தது. யார் சீண்டினார்கள்? இந்திய கிரிக்கெட் ரசிகர்கள் வாழ்வில் இரண்டறக் கலந்துவிட்டதோடு மட்டுமின்றி இப்போது தென் ஆப்பிரிக்க ரசிகர்களையும் பித்தநிலைக்குக் கொண்டுவந்துவிட்டது. அடுத்த வருடம் தென் ஆப்பிரிக்க ரசிகர்கள் ஐ.பி.எல். ஆட்டங்களை மீண்டும் தங்கள் நாட்டிலேயே நடத்தச் சொன்னாலும் வியப்பில்லை.

இந்த ஃபாஸ்ட் ஃபுட் கிரிக்கெட்டுக்கு இலக்கணங்கள், ஒழுக்கங்கள், நடைமுறைகள் எதுவும் கிடையாது என்று தாக்குதல் தொடுப்போரும் உண்டு. 20-20 கிரிக்கெட்டை அழிக்கிறது, புராதனமுறைப்படி ஆடுபவர், நல்ல கேப்டன் என்கிற கிரிக்கெட்டின் அத்தியாவசியங்கள் எதுவும் இதற்குத் தேவை கிடையாது என்று அடித்துச் சொல்பவரும் உண்டு. ஆனால் இதெல்லாம் வாய்ச்சவடாலுக்கு மட்டுமே. மைதானத்தில் நல்ல தலைமை இல்லாவிட்டால் அணியின் கதி அதோகதிதான் என்று மீண்டும் நிரூபித்திருக்கிறார்கள் தோனியும்



✱ வார்னே

✱ தோனி

வார்னேவும். பேராற்றல் கொண்ட தலைமை இன்றி எந்த அணியாலும் அடுத்த சுற்றுக்கு நகரமுடியாது என்பது இன்னொருமுறை ஐ.பி.எல்.லில் உத்தரவாதமாகியுள்ளது.

ஒன்பது பந்துகளில் ஆறு ரன்கள் தேவை என்கிற நிலையில், அணியை வார்னே ஒருங்கிணைத்த விதமும் ஆறு பந்துகளில் 21 ரன்கள் அடிக்கவேண்டிய நிலையில் மெக்கல்லம் நிலைதடுமாறிய விதமும் மீண்டும் மீண்டும் நல்ல தலைமைக்கான தேவையை வலியுறுத்தியுள்ளன. முனாஃப்

## இருக்கிறான்!

பட்டேல் எல்லாம் வார்னே அணியில் விளையாடும் போதுதானே எழுச்சியுடன் பந்துவீசுகிறார்! எந்த அணியால் தொடர்ந்து தோற்றாரோ அதே அணியைக் கொண்டு தொடர்ந்து ஐந்து ஆட்டங்களில் வெற்றி பெற்று அடுத்த கட்டத்துக்கு முன்னேறினார் தோனி. அது நிற்க. எந்த ஓர் அணியையும் வழிநடத்தாத தோனிக்கு மிகக் குறுகிய காலத்தில் கேப்டன் பதவி கிடைத்ததும், ஒரு தலைவனுக்குரிய அத்தனை தகுதிகளும் வார்னேவுக்கு இருந்தும் தன் வாழ்நாளில் வார்னே ஆஸ்திரேலியாவின் கேப்டனாகாததும் மிகப்பெரிய முரண் நகை. ●

● ச.ந.கண்ணன் ●


10 YEARS OF SPREADING PROSPERITY




# விவேகமான முதலீடு. உயர்வான பலன்கள்.

**இன்றே ஒரு BLB மனையை வாங்கிடுங்கள்.**

நீங்கள் வளமான எதிர்காலத்தைப் பெறுவதை உறுதி செய்து கொள்ள இன்றே BLB மனைகளின் முதலீடு செய்திடுங்கள். சென்னைக்கு மிக அருகில் அதிக வளர்ச்சி காணும் இடங்களில் அமைந்துள்ளது என்பதோடு விரைவாக உயர்ந்திடும் மதிப்பு என்னும் சிறப்பம்சத்தையும் கொண்டவை BLB மனைகள். பாதுகாப்பான மற்றும் இலாபகரமான பலன்கள் பெற விரும்புபவர்களின் உடனடி தேர்வு BLB மனைகள் மட்டுமே.

(D.T.C.P. / CMDA APPROVED)

**ஸ்ரீமத் ராமானுஜர் டவுன்**
வண்டலூர்

**ஸ்ரீ நரசிம்மா நகர்**
பூந்தமல்லி அருகே

**ஸ்ரீ ஹயக்ரீவா நகர்**
செங்கல்பட்டு

**ஸ்ரீ பத்மநாபா அவென்யூ**
காஞ்சிபுரம்

இலவசமாக மனையைப் பார்வையிட அழைக்கவும் :

**2834 5104/05/06**

**BLB ESTATES PRIVATE LIMITED**
"SREE AUDISESHA BHAVAN",
New No. 21, Chinnaiah Street, T.Nagar, Chennai - 600 017.
E-Mail: blbestmail@vsnl.net Website: www.blbestates.com

நன்மதிப்பில் முதலீடு

## தேர்தல் முடிவு Vs தே.மு.தி.க.

# பேர் சொல்லும் பத்து பார்சன்ட்!



● விஜயகாந்த்

தேர்தல் முடிவுகள் வெளிவந்த மாலை அ.தி.மு.க. ஸீனியர் பிரமுகர் ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தோம். ''குறைந்தபட்சம் இருபத்தைந்து தொகுதிகளில் நாங்கள் பெற்றிருக்க வேண்டிய வெற்றியை, வோட்டுக்களைப் பிரித்துச் சென்றதன் மூலம் பறித்து விட்டார் விஜயகாந்த்'' என்று எரிச்சலுடன் சொன்னார் அவர். விஜயகாந்த், தி.மு.க.-காங்கிரஸ் அணியில் இணைந்திருந்தால் அரசு எதிர்ப்பு வோட்டுக்கள் முழுக்க முழுக்க அ.தி.மு.க. அணிக்குக் கிடைத்திருக்கும் என்பது அவரது கருத்து. அது நடக்காத நிலையில் அதிருப்தி வோட்டுக்களை முழுமையாக வாங்க, தே.மு.தி.க.வை அ.தி.மு.க. அணியில் சேர்க்க மார்க்ஸிஸ்ட் விரும்பியது. ஆனால், அம்மா ஒப்புக் கொள்ளவில்லையாம்.



● பண்ருட்டி ராமச்சந்திரன்

''எங்கள் கூட்டு, கடவுளுடனும் மக்களுடனும்தான் என்று மேடைக்கு மேடை சொல்லி வந்தார் விஜயகாந்த். தமிழகத்துக்கு நன்மை செய்வதாக எழுதித் தந்தால் தேசியக் கட்சிகளுடன் கூட்டு என்றும் சொன்னார் அவர். ஆனால் தேர்தல் நெருக்கத்தில் காங்கிரஸ் - தி.மு.க. கூட்டணியில் அவரைச் சேர்க்க பெரிய முயற்சி நடந்தது. பண்ருட்டி ராமச்சந்திரனும் விஜயகாந்தின் மைத்துனர் சுதீஷும் தில்லி சென்று காங்கிரஸ் தலைவர்களைச் சந்தித்ததாகப் பேச்சும் கிளம்பியது. ஆனால் சாணக்கியரான கலைஞர், ''விஜயகாந்த் தனியாகப் போட்டியிட்டால் அரசு அதிருப்தி வோட்டுகளைப் பிரிப்பார். நமக்கு வெற்றி கிடைக்கும்'' என்று சொன்ன காரணத்தால், காங்கிரஸ் அவரைத் தனியாக நிற்கும்படி கேட்டுக் கொண்டதாக அ.தி.மு.க. அணியினர் சொல்லி வந்தார்கள். இப்போது அ.தி.மு.க. அணி பயந்தது போலவே, பல தொகுதிகளில் வோட்டைப் பிரித்து அவர்களை வீழ்த்தியிருக்கிறார் விஜயகாந்த்.

2006 சட்டமன்றத் தேர்தலில் 234 தொகுதிகளில் போட்டியிட்ட தே.மு.தி.க.

பெற்ற வாக்குகள் 8.38 சதவிகிதம். இப்போது 40 பாராளுமன்றத் தொகுதிகளில் போட்டியிட்டு பெற்றுள்ள வாக்குகள் பத்து சதவிகிதம். மொத்தம் பதிவான மூன்று கோடி வாக்குகளில் 30 லட்சம் வாக்குகளைப் பெற்றுள்ளது தே.மு.தி.க! ஆரணி, சிவகங்கை, நெல்லை, திண்டுக்கல், ஸ்ரீபெரும்புதூர், நாகப்பட்டினம், பெரம்பலூர், கடலூர், மத்திய சென்னை, விருதுநகர், தேனி, காஞ்சிபுரம் ஆகிய தொகுதிகளில் தி.மு.க. - காங்கிரஸ் அணி வென்றதற்குக் காரணம், தே.மு.தி.க. வோட்டுக்களைப் பிரித்ததுதான் என்கிறது ஜெ.தரப்பு.

திருவள்ளூர், காஞ்சிபுரம், தர்மபுரி, ஆரணி, விழுப்புரம், கள்ளக்குறிச்சி, சேலம், விருதுநகர், திண்டுக்கல் ஆகிய ஒன்பது தொகுதிகளில் ஒரு லட்சத்துக்கும் அதிகமான வோட்டுக்களை வாங்கியிருக்கிறார் விஜயகாந்த். தமிழக அரசியலில் அலட்சியப்படுத்த முடியாத வளர்ச்சி என்று அரசியல் நோக்கர்கள் கருதுகிறார்கள்.

''அ.தி.மு.க. அணி தோல்விக்கு தே.மு.தி.க. காரணமா?'' என்று பண்ருட்டி ராமச்சந்திரனிடம் கேட்டோம்.

''கலைஞர் - ஜெ. என்று இருவரையும் பிடிக்காத மற்றும் இளைஞர்களின் புதிய வோட்டுக்கள்தான் நாங்கள் பெற்றவை. ஒரு இடத்திலும் வெற்றி பெறவில்லை என்பதால் எங்களுக்கு வருத்தம் இல்லை. மாறாக, கட்சி வளர்ச்சியடைந்திருப்பது தெரிய வந்திருக்கிறது. வரும் தேர்தல்களிலும் தனித்துத் தான் போட்டி. அதே சமயம் தி.மு.க.- அ.தி.மு.க. தவிர வேறு கட்சியுடன் கூட்டணி சேர வாய்ப்பு உண்டு'' என்கிறார் பண்ருட்டி.

2011 சட்டமன்றத் தேர்தல் வரை எந்த ஒரு தொய்வும் இல்லாமல் கட்சியை வளர்த்தால் விஜயகாந்த் அசைக்க முடியாத ஒரு சக்தியாக உருவாகும் வாய்ப்பிருக்கிறது.

**- ப்ரியன்**

## கோட்டை விட்டார் மருத்துவர்!

''வரலாற்றுப் பிழை செய்து விட்டார் மருத்துவர் ராமதாஸ். நாங்கள் உட்பட வைகோ, மருத்துவர் ஆகியோர் தனி அணி கண்டிருந்தால், இருவேறு அணிகளில் நாங்கள் போட்டியிட்டிருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்காது'' என்று தேர்தலுக்கு முன்பு திருமாவளவன் கல்கிக்கு அளித்த பேட்டியில் சொல்லியிருந்தார். ஏழு தொகுதிகளிலும் பா.ம.க. தோற்ற நிலையில் என்ன சொல்கிறார் திருமாவளவன்:

''நாங்கள் தனி அணி கண்டிருந்தால், தி.மு.க.-அ.தி.மு.க.வுக்கு ஒரு மாற்றாக உருவாகியிருப்போம். வாய்ப்பை இழந்து விட்டார் மருத்துவர். இப்போது விஜயகாந்த் நுழைந்திருக்கிறார். தி.மு.க. அணியில் நாங்கள் இருந்ததால் தாழ்த்தப்பட்டவர்கள், முஸ்லிம்கள் வோட்டு முழுமையாக விழுந்தது. ஏழு தொகுதிகளில் பா.ம.க. தோற்றதற்கு இதுவும் காரணம். பா.ம.க. போல் அல்லாமல் எங்களுக்குத் தமிழகத்தில் பரவலாக வோட்டு வங்கி இருக்கிறது. மருத்துவர், வைகோ மற்றும் நாங்கள் உட்பட தமிழின ஆதரவாளர்கள் தனி அணி காணாதது வரலாற்றுப் பிழையே'' என்கிறார் திருமாவளவன்.



* திருமாவளவன்



# கல்கி



2009 மே 31
விரோதி வைகாசி 17
மலர் : 67
இதழ் : 44

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## வாக்காளர்களின் தொலைநோக்கு!

நாடாளுமன்றத் தேர்தல் முடிவுகள், கவலை மிக்க எதிர்பாப்புகளை உடைத்தெறிந்து, நம்பிக்கையூட்டும் விதமாக அமைந்துள்ளன. இந்திய வாக்காளர்கள் பொறுப்புணர்ச்சியுடன் சிந்தித்து வாக்களிக்கக் கூடியவர்கள் என்பதை மீண்டும் நிரூபித்துள்ளனர். ஆங்காங்கே பண பலமும் சில குறுக்கு வழி பிரசாரங்களும் வெற்றி பெற்றுள்ளன என்ற போதிலும், அரசியல் இரட்டை வேடமும் மதவெறியும் உணர்ச்சிகளை உசுப்பும் போக்கும் அணி தாவல்களும் தண்டிக்கப்பட்டுள்ளன. நிலையான ஆட்சியையும் மதச்சார்பின்மையையும் வாக்குறுதிகளாக்கிய காங்கிரஸின் கரங்களை, வாக்காளர்கள் பலப்படுத்தியுள்ளனர். ஆதரவுக் கட்சிகளின் இடையூறான தலையீடுகளின்றி, ஐந்தாண்டு காலம் ஆட்சி நடக்க வகை செய்வதே வாக்காளர்களின் நோக்கமாக இருந்திருக்கிறது. வாக்காளர்களின் இந்தத் தொலைநோக்கு, இந்திய அரசியல்வாதிகளுக்கு ஒரு சிறந்த பாடம்!

எல்லா மாநிலங்களிலும் உழைப்பைச் சிதறவிடாமல், உ.பி., பீஹார் போன்ற சில மாநிலங்களில் தீவிர கவனம் செலுத்தி கணிசமான வெற்றி பெற்ற ராகுல் காந்தியின் சாணக்கியத்துக்குப் பாராட்டு குவிந்த வண்ணம் இருக்கிறது. அவரை அமைச்சராக்கி அழகுபார்க்கும் மும்முரமும் தென்படுகிறது. அந்த முயற்சிகளை ஏற்க மறுத்து, கட்சியை - குறிப்பாக உட்கட்சி ஜனநாயகத்தைப் பலப்படுத்துவதற்கே தாம் விரும்புவதாக ராகுல் காந்தி தெரிவித்திருப்பது வரவேற்கப்பட வேண்டிய விஷயம். இந்த முடிவில் அவர்









உறுதியாக இருக்க வேண்டும்; வற்புறுத்தலுக்கோ செண்டிமெண்ட்டுக்கோ பணிந்துவிடக் கூடாது. அடுத்த தேர்தலுக்குள் கட்சியை வேர் மட்டத்தில் வலுவாக்கிவிட்டால், அது காங்கிரஸுக்கு மட்டுமின்றி, இந்திய ஜனநாயகத்துக்கும் பெரும் நன்மை பயக்கும்.

புதிய அரசில் தத்தமது பங்குக்குப் பதவி கேட்டு பேரம் பேசி வரும் கட்சிகளின் போக்குதான் அருவருப்பூட்டுகிறது. பிரதமர் தமது அமைச்சரவையைத் தேர்வு செய்ய பூரண அதிகாரம் பெற்றவர் என்பதை மதித்து, அவர் முடிவுகளை ஏற்கும் பக்குவம் அனைத்துத் தலைவர்களுக்கும் அவசியம்.

புதிய ஆட்சிக்குக் காத்திருக்கும் சவால்களும் அதிகம். எதிர்பார்த்ததைக் காட்டிலும் மேன்மையான வெற்றி கிட்டிய மகிழ்ச்சியில் இந்தச் சவால்களை மறந்துவிடலாகாது. தொய்வு கண்டுள்ள பொருளாதாரத்தைத் தூக்கி நிறுத்த, தொலைநோக்குடன் இயங்க வேண்டும். அச்சுறுத்தும் பல ரக பயங்கரவாதப் பிரச்னைகளை வெல்ல, உறுதியும் ராஜதந்திரமும் இவ்வரசுக்கு அவசியம் வேண்டும்.

இவை தவிர, கல்வி, சுகாதாரம், வேலை வாய்ப்பு, அடிப்படை வசதிகள் போன்ற பிரிவுகளில் எத்தனை உழைத்தாலும் போதாது என்கிற அளவுக்கு, நாம் இன்னமும் பின்தங்கியே இருக்கிறோம். இவற்றுக்கு முன்னுரிமை கொடுத்து, மிகத் தீவிரமாக இயங்கினால், ஐந்தாண்டுகளுக்குப் பிறகு காங்கிரஸ் தனிப் பெரும்பான்மையுடன் ஆட்சி அமைப்பதுகூட சாத்தியமாகிவிடும்.

## வளர்ச்சி சகாப்தம் மலரட்டும்

**வி**டுதலைப் புலிகள் தலைவர் பிரபாகரனின் காலம் ஒரு வன்முறை சகாப்தமாகவே வரலாற்றில் இடம்பெறும். இலங்கைத் தமிழர்களின் உரிமைகள் என்ற நடைமுறை சாத்தியமான நல்ல குறிக்கோளைக் காட்டிலும், தமிழீழம் என்ற பிரிவினை இலக்கிலும் அதனை அடைய

வன்முறை மார்க்கத்திலும், ஆதிக்கப் போக்கிலும்தான் அதிக நாட்டம் கொண்டிருந்தார் பிரபாகரன். அவரது இயக்கம் தோற்றதற்கும் இதுவே காரணம்.

பிரபாகரன் அழிவையும் ஆயுதங்களையும்விட அறிவையும் அன்பையும் ஜனநாயகப் பண்புகளையும் கொள்கைகளாகக் கொண்டிருந்தால், இலங்கைத் தமிழர்களின் பிரச்னை தீர்ந்திராவிட்டாலும் தீர்வு நோக்கித் திரும்பியிருக்கும். இப்போது அவரது மரணத்தையும் பல லட்சம் உயிர்களின் பலியையும் விலையாக்கிய பின், அந்தத் திருப்பத்துக்கான வாய்ப்புகள் தென்படுகின்றன!

''தமிழர்கள் உரிமைகள் நிச்சயமாக மதிக்கப்படும், நியாயமான முறையில் வழங்கப்படும் என்று ராஜபட்சய பேசியிருப்பது மிக ஆறுதலாக இருக்கிறது. ஆனால், அவர் பணி சுலபமானதல்ல. பிரபாகரன் மரணத்தை பட்டாசு வெடித்துக் கொண்டாடிய நாட்டில், தமிழர்களுக்குத் தொடர்ந்து எதிர்ப்புணர்வு இருக்கவே செய்யும். அதேபோல், யுத்தத்திலும் வன்முறையிலும் கொல்லப்பட்ட தமிழர்களின் குடும்பத்தாருக்கும், ராணுவத்திடமும் அரசிடமும் கசப்புணர்வு மேலிடும். உணர்ச்சி சிக்கல் மிக்க சூழலை அரசியல் தீர்வினால் மட்டும் நேராக்கிவிட முடியாது. மனிதாபிமானம் மேலோங்க வழி காண வேண்டும்.



இதனால்தான் இலங்கைத் தமிழர் பிரச்னையில் இந்தியாவின் பொறுப்பு முன்னெப்போதைக் காட்டிலும் அதிகமாகிறது. விடுதலைப் புலிகள் வன்முறையையும் பிரிவினை சித்தாந்தத்தையும் கைவிடாத நிலையில், இந்தியாவால் இலங்கை அரசு மீது தார்மிக ஆளுமை செலுத்த இயலவில்லை. இனி அந்தத் தடை இல்லை என்பதால் இந்தியா விழிப்போடும் பொறுப்போடும் இயங்க வேண்டும்.

'இலங்கைத் தமிழர்கள் விவகாரத்துறை' என்பதாக ஒன்றை, புதிய அரசாங்கம் உடனடியாக ஏற்படுத்தி, அதற்கொரு அமைச்சரையும் நியமிக்க வேண்டும். இத்துறையானது, இலங்கைத் தமிழர்களின் உரிமைக்காக இலங்கை அரசு வகுக்கும் திட்டத்தைப் பரிசீலித்து, மேம்படுத்தி, உரிய காலகெடுவுக்குள் அதை நடைமுறைப்படுத்த எல்லாவித உதவிகளையும் செய்ய வேண்டும்.

அகதிகள் மறுவாழ்வு, வாழ்விடம் இழந்தோரின் மறுவாழ்வு போன்றவற்றைத் தீவிரமாகக் கண்காணித்து வர வேண்டும். மிக முக்கியமாக, இலங்கை அரசுடனான நல்லுறவு மூலம் இலங்கைத் தமிழர்கள் வாழ்வை மலர்விக்க முயற்சி செய்ய வேண்டும். தொழில்-விவசாயம்-வேலைவாய்ப்பு மூலம் இது நடைபெற வேண்டும். இலங்கை அரசு, ஈழத்தமிழர்களை ஏமாற்றவோ வஞ்சிக்கவோ முற்பட்டால், சர்வதேச ஆதரவு திரட்டி, கடுமையான நடவடிக்கை எடுக்கவும் தயங்கக் கூடாது.

பிரபாகரன் காலத்து வன்முறை சகாப்தம் ஒரு பாடமாக மட்டுமே நிலைக்கட்டும். புதிதாக ஒரு வளர்ச்சி சகாப்தம் மலரட்டும். ●

# ஆல்ஃபா மைண்ட் பவர்

ஆழ்மனதின் சக்தி!



**ALPHA™ MIND POWER**

"Unwind Your Mind & Empower Yourself"

**மனோ சக்தி நிபுணர் டாக்டர் விஜயலக்ஷ்மி பந்தையன்**

அளிக்கும் இந்தியாவின் புகழ்பெற்ற சித்தர்களின் சக்தியுடன் கூடிய

ஒரு நாள் ஆல்ஃபா தியான பயிற்சி



- மன அழுத்தம் குறைக்க
- பண வரவை அதிகரிக்க
- உறவுகளைச் சீர்படுத்த
- குடும்பத்தில் அன்பு நிலவச் செய்ய
- நோய் தீர்க்க, நிம்மதியாக தூங்க
- பரீட்சையில் அதிக மார்க் வாங்க
- மகிழ்ச்சியுடன், தன்னம்பிக்கையுடன், வெற்றியுடன் வாழ

தபால் மூலம் கற்கலாம் ஆல்ஃபா மைண்ட் பவர் ஆடியோ சிடி மற்றும் பயிற்சி புத்தகம் ஆங்கிலம் மற்றும் தமிழில் தபால் மூலம் பெறலாம்.

ஒரு நாள் பயிற்சி மட்டுமே!

**ஆல்ஃபா தியான அனுபவம் இதோ ஒரு கடிதம்**

**ஜூலை 2009**

நீண்ட நாட்களாக என் தங்கைக்கு திருமணம் நடைபெறாமல் தடைபட்டுக் கொண்டிருந்தது. பிறகு நான் ஆல்ஃபா தியானத்தின் மூலம் அவள் திருமணம் முடிந்து புகுந்த வீட்டில் கணவன், மற்றும் மாமியார், மாமனாருடன் சந்தோஷமாக இருப்பதுபோல் காட்சியாகப் பார்த்து வந்தேன். ஒரு மாதத்திலேயே அவளின் திருமணம் நல்ல முறையில் நடந்தேறியது. ஆல்ஃபாவிற்கு நன்றி! குருஜிக்கு நன்றி!

ஆல்ஃபா சித்தா, மதுரை

அனைத்து ஊர்களிலும் பயிற்சி வகுப்புகள் நடைபெறுகின்றன.

அடுத்துவரும் பயிற்சி வகுப்பு

**திருச்சி 14.6.2009**

**சென்னை 28.6.2009**

**கோயம்புத்தூர் 12.7.2009**

ஆர்.எஸ்.ஆர்.பிளாசா, 3வது தளம், 50,51 ஆற்காடு ரோடு, சாலிகிராமம், சென்னை - 600 093. இந்தியா

ஃபோன் : +91- 44 - 2376 0007, 2376 6555

மொபைல் : 98414 02000, 98412 72146, 98416 96664

e-mail : amp@alphamindpower.net www.alphamindpower.net




# ஸ்ரீ சிவராம அறக்கட்டளை

5, லின்வுட் அவென்யூ, மகாலிங்கபுரம், சென்னை-34. போன் : 28173810 / 3811

## வேதங்கள் பயில மாணவர்கள் சேர்க்கை

ஸ்ரீ சிவராம அறக்கட்டளை 1998 முதல் சிவபீட சிவராம வேதபாடசாலை என்ற பெயரில் திரிபுரசுந்தரிநகர், பிள்ளைப்பாக்கம், ஸ்ரீபெரும்புதூர் - 602 105, நகரில் பாடசாலை நடத்தி வருகிறது. 1998 முதல் நடந்து வரும் எங்கள் பாடசாலையில் வேதம் கற்கும் குழந்தைகளுக்கு ஆங்கிலம், ஸமஸ்க்ருதம், கணிதம் முதலிய பாடங்களும் கற்பிக்கப்படுகின்றன. இதுவரை 15 வித்யார்த்திகள் அத்யயனம் பூர்த்தி செய்து முடித்திருக்கிறார்கள்.

உபநயனம் ஆன 7 வயது முதல் 12 வயது வரை உள்ள குழந்தைகளுக்கு ரிக், க்ருஷ்ண யஜூர், சுக்ல யஜூர், ஸாம வேத அத்யயனம் செய்விக்க விரும்பும் பெற்றோர்கள் உடன் அணுகவும். மேலும் தங்கள் குழந்தைகளுக்கு உபநயனம் செய்து பாடசாலையில் சேர்க்க விரும்பும் பெற்றோர்கள், எங்கள் அறக்கட்டளையால் 04.06.2009 (வியாழக்கிழமை) நடைபெறும் சமஷ்டி உபநயனத்தில் உபநயனம் செய்து பாடசாலையில் சேர்க்கலாம். உடன் மேற்கண்ட நிர்வாக அலுவலகத்துக்கு விண்ணப்பிக்கலாம்.

தங்களது பிறந்த நாள், திருமணநாள் போன்ற சுபதினங்களில் வேதவித்யார்த்திகளுக்கு ஒரு நாள் சமாராதனை போஜனம் செய்து வைக்க விரும்புபவர்கள் ரூ.1500 செலுத்தலாம். டிரஸ்ட்க்கு கொடுக்கும் நன்கொடைக்கு 80ஜி பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு.

நேரில் வந்து சந்திக்க விரும்பும் பெற்றோர்கள் மேற்கண்ட விலாசத்தில் காலை 10 மணி முதல் மதியம் 1 மணி வரை வந்து மேல் விவரங்கள் பெறலாம்.

## கிண்டல் காலனி

# 'ஜில்'லுன்னு ஒரு ஊர்!



**(காலை எழுந்ததிலிருந்து பரபரப்பாக இருந்தாள் பானுமதி. அவளது கணவன் ரங்கநாதன் காலையெல்லாம் தொட்டு வணங்கி கண்ணில் ஒத்திக்கொண்டாள். குளித்து தலை காய விட்டபடி, கணவனைத் தொட்டு எழுப்பினாள்.)**

**பானுமதி:** என்னங்க... உங்களைத் தான்... காஃபி குடிங்க.

**ரங்கநாதன்:** என்னாச்சும்மா உனக்கு? கூண்டுல மாட்டின நாய் மாதிரி கூவி னாலும் காஃபி தரமாட்டே... இன்னைக்கு இவ்வளவு சீக்கிரம் கொண்டு வந்து கொடுக்கறே...?

**பானுமதி:** மறந்துட்டீங்களா... குடும் பத்தோட கொடைக்கானல் கூட்டிட்டுப் போறேன்னு சொன்னீங்களே...

**ரங்கநாதன் :** யார் குடும்பத்தை...?

**பானுமதி:** ம்... நம்ம குடும்பத்தை. எங்க அப்பா... அம்மா குடும்பத்தை.

**ரங்கநாதன்:** இவ்வளவு பேரையும் கூட்டிட்டுப் போயி... அங்க குடும்ப மாநாடா போடப் போறேன்?

**பானுமதி :** அதெல்லாம் தெரியாது. கஞ்சத்தின் கடவுளான நீங்களே வாய் விட்டு கொடைக்கானல் போலாம்னு சொன்னதும் கையும் ஓடலை... காலும் ஓடலை.

**ரங்கநாதன் :** இப்பவும் அதேதான் சொல்றேன். நாம கொடைக்கானல் போறோம். சரி நான் குளிச்சிட்டு வந்து டறேன்.

(அப்போது அவர்களது பத்து வயது மகன் வெங்கட் உள்ளே வருகிறான். அவன் கையில் கொடைக்கானல் மேப்)

**பானுமதி:** என்னடா கைல மேப்..?

**வெங்கட் :** முதல் முதலா அப்பா குடும்பத் தோட வெளியில, அதுவும் கொடைக்கானல் கூட்டிட்டுப் போறேன்னு சொன்னதால எனக்கு ஒரு சின்ன சந்தேகம். அங்க கூட்டிட்டுப் போன பின் னாடி அதிகமா செல வாகுதுன்னு நம்மளைப் பாதியில விட்டுட்டு வந் துட்டா என்ன பண்றது? பொடி நடையா வீடு வர வழி தெரியணுமில்ல... அதுக்குத்தான் இந்த மேப்.

(அவர்களோடு, மகள் காயத்ரியும் வந்து சேர்ந்து கொள்கிறாள்)

**காயத்ரி :** ஏம்மா... கொடைக்கானல் போற விஷ யத்தை தாத்தா - பாட்டிக்கிட்ட சொல் லிட்டியா?

**பானுமதி :** உங்கப்பா எங்கிட்ட சொன்ன மறு நிமிஷமே... போன் பண்ணி எங்கப்பாகிட்ட சொல்லிட்டேன். அநே கமா...

(காலிங் பெல் சத்தம் கேட்க, ஓடிச் சென்று வெங்கட் கதவைத் திறக்க, வெளியே தாத்தா பஞ்சநாதனும், பாட்டி பங்கஜமும் நின்றிருந்தனர். தாத்தா பெரிய




கருப்பு தொப்பி, முழங்காலுக்குக் கீழ் வரையிலான கருப்பு ஓவர் கோட், கருப்பு ஷூவுடன் 'ரகசிய போலீஸ் 115' பட எம்.ஜி.ஆர். கெட்டப்பில் இருந்தார்.)

**காயத்ரி :** என்ன தாத்தா... வேஷம் போட்டுட்டு வந்திருக்கீங்க...?

**பஞ்சு:** வேஷமில்லடி கொழந்தே... கொடைக்கானல் ரொம்பக் குளிரும்னு கேள்விப்பட்டிருக்கேன். அதுக்குத்தான் இந்த கெட்டப். சினிமாவுக்கு டிரெஸ் வாடகைக்கு விடற கடையில எடுத்தேன்.

*(தலை துவட்டியபடி வெளியே வந்த ரங்கநாதன்)*

**ரங்கநாதன்:** பானு... யார் இந்தப் பூச்சாண்டி...?

**பானுமதி:** பூச்சாண்டி இல்லைங்க... எங்கப்பா.

**ரங்கநாதன்:** ஓ... ஸாரி மாமா... ஆமா... போன்கூட பண்ணாம திடீர்னு வந்து நிக்கறீங்க?

**பங்கஜம்:** கொடைக்கானல்... குடும்பத்தோட போறோம். நீங்களும் வாங்க... வரலேன்னா கொடைக்கானல் கொடுமை கானலா ஆயிடும்னு நீங்க சொன்னீங்களாமே... பானுமதி சொன்னா. அதான் வந்தோம்.

**ரங்கநாதன்:** *(பானுமதியை முறைத்து விட்டு)* ஆமா... சொல்லியிருப்பேன்.

**(மறுநாள் காலையில் அனைவரும் ரெடியாகி, லக்கேஜ் மற்றும் சீடை, முறுக்கு, கடலை உருண்டை, தேங்காய் பர்பி, தயிர்சாதம், புளி, லெமன் என்று பார்சல்... பார்சல்களாகக் கட்டி... காருக் காகக் காத்திருந்தனர். ரங்கநாதன் தூக்கம் கலைந்து 'ஓ' என்ற கொட்டாவியுடன் வந்து வாசலில் பார்த்து அதிர்ச்சியடைந் தான்)**

**ரங்கநாதன்:** *(மகிழ்ச்சியுடன்)* மாமா... ஊருக்குக் கிளம்பிட்டீங்களா..? அதுவும் பார்சலோட....

**பங்கஜம் :** எங்க ஊருக்கு இல்ல மாப்ள. கொடைக்கானலுக்கு. அங்க சாப் பிடத்தான் கொஞ்சமா நொறுக்குத் தீனி.

*(அப்போது வாசலில் ஆட்டோ வந்து நிற்கிறது.)*

**வெங்கட்:** என்னம்மா கார் வரும்னு பார்த்தா ஆட்டோ வருது?

**பஞ்சு:** ஒரு வேளை மாப்பிள்ளை ட்ரெயின்ல புக் பண்ணி இருப்பாரோ என்னவோ...!

**பங்கஜம்:** ஏன் மாப்ளே... கொடைக் கானலுக்கு ஆட்டோவுலதான் போறோமா?

**ரங்கநாதன்:** தயவு செஞ்சு கேள்வி கேக்காம ஆட்டோவுல ஏறுங்க.

*(அனைவரும் ஆட்டோவில் ஏறி அமர, ஆட்டோ ரெயில்வே ஸ்டேஷன் போகா மல் அமிஞ்சிகரையில் உள்ள ஒரு தியேட் டர் வாசலில் நிற்கிறது.)*

**பானுமதி:** என்னங்க... ரெயிலுக்குப் போகாம தியேட்டருக்குக் கூட்டிட்டு வந்திருக்கீங்க...?

**ரங்கநாதன் :** நான் உன்கிட்ட என்ன சொன்னேன்?

**பானுமதி :** கொடைக்கானலுக்குக் கூட்டிட்டுப் போறேன்னு சொன்னீங்க.

**ரங்கநாதன் :** அதான்... போஸ்டரைப் பார்... கொடைக்கானல் சினிமா. கொடைக் கானல் சினிமாவுக்குக் கூட்டிட்டு போறேன்னு சொன்னா... ஊருன்னு நெனைச்சு ஒரு ஊரையே கூட்டி வெச்சி ருக்கே.

**பஞ்சு :** ஆனாலும் இது ரொம்ப 'டூ மச்' மாப்ளே.

**பானுமதி:** *(கணவனிடம்)* என் கையைக் கொஞ்சம் பிடிங்களேன்.

**ரங்கநாதன்:** எதுக்கு...?

**பானுமதி:** சும்மாத்தான்... பிடிங் களேன்.

*(ரங்கநாதன் பானுமதி கையைப் பிடிக்க...)*

**பானுமதி:** ஐயோ... யாரோ ஒருத்தர் என் கையைப் பிடிச்சு இழுக்கிறார்... ஓடி வாங்க.

*(அவள் கத்த, மொத்தக் கூட்டமும் ரங்கநாதனைச் சுற்றி வளைத்து அடி பின்னுகிறது.)*



**கொடைக்கானல்... குடும்பத்தோட போறோம். நீங்களும் வாங்க... வரலேன்னா கொடைக்கானல் கொடுமைகானலா ஆயிடும்.**






# சங்கடத்தில் சிறுத்தை!

எதிர்பார்த்தபடி பெரும்பான்மையான இடங்களில் அ.இ.அ.தி.மு.க. வெற்றி பெறாததற்கு அக்கட்சியின் பிரமுகர்கள் பல காரணங்களைச் சொல்கிறார்கள். முதலாவதாக அவர்கள் சொல்வது, ''அம்மா சாலை வழியே சென்று பிரசாரம் செய்திருக்க வேண்டும்; ஹெலிகாப்டரைத் தவிர்த்திருக்க வேண்டும்'' என்பது. அடுத்து, தன் சொந்தப் பணத்தைப் போட்டுச் செலவழிக்க வசதியில்லாதவர்களுக்கு ஸீட் கொடுத்தது. மூன்றாவதாக, கூட்டணிக் கட்சித் தலைவர்களுடன், தமிழகத்தின் முக்கிய நகரங்களில் பிரசாரம் செய்யாதது. கடைசியாகவும், மிகவும் முக்கியமாகவும், பிரசாரத்தின் இடையில் தனி ஈழத்துக்கு ஆதரவாக நிலைப்பாட்டைத் திடீரென்று மாற்றிக் கொண்டது. ஏதாவது அதிரடி மாற்றங்கள் நடந்தாலே ஒழிய அ.இ.அ.தி.மு.க.வின் முக்கியத்துவம் தேசிய மற்றும் தமிழக அரசியலில் உணரப்படாது.

தி.மு.க. - காங்கிரஸ் உறவுக்குள் எந்த உரசலும் வராது என்பது வெளிப்படையாகத் தெரியும் விஷயம். ஆனால், தேர்தல் வெளிப்படுத்தியிருக்கும் மறைமுகமான விஷயம் என்னவென்றால், மத்தியில் மிக உறுதியான அடித்தளத்தோடு அமர்ந்திருக்கும் காங்கிரஸ், தமிழ்நாட்டிலும் இனி தனது நிலையைப் பலப்படுத்திக் கொள்ளும் முயற்சியை எடுக்கப் போகிறதாம்! பல பெருந் தலைகள் மண்ணைக் கவ்வியிருப்பது அக்கட்சிக்குக் கிலியூட்டியிருக்கிறது. இன்னமும் சொல்லப் போனால், ஸ்டாலின் தலைமையில் தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணி அரசுக்குக் கூட அது வலியுறுத்தக்கூடும்.

சிதம்பரம் தொகுதியில் நின்று வென்ற திருமாவளவன் மத்திய அமைச்சராகும் வாய்ப்பு பிரகாசமாக இருக்கிறது. ஆனால், அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளலாமா, வேண்டாமா என்ற வாக்கு வாதம் சிறுத்தைகளிடம் நடந்து வருகிறது. பல காரணங்களால் மத்திய அரசு ஈழப் பிரச்னையில் உரிய நடவடிக்கை எடுக்காமல் இருக்கிறது. வாக்குப் பதிவு முடிந்த அடுத்தநாள் கூட, திருமா, இதுபற்றிச் சுட்டிக்காட்டி அறிக்கை விட்டார். இதுபோன்ற நிலையில் அமைச்சரவையில் இடம்பெற்றால், சங்கடமாக இருக்கும் என்று சிறுத்தைப் பிரமுகர்கள் சொல்கிறார்கள். இறுதியில், கலைஞர் வற்புறுத்தலில் திருமா அமைச்சராகக் கூடும்.

- ஸ்ரீநி

## மனசுக்கு 'ஜில்'

கோடை தொடங்கிவிட்டாலே மூட்டை முடிச்சுகளுடன் 'ஜில்' ஏரியாக்களைத் தேடி படையெடுப்பார்கள். தமிழக அரசின் சுற்றுலா மற்றும் பண்பாட்டுத் துறை செயலர் வெ.இறையன்புவை, இந்த நேரத்தில் சந்தித்துப் பேசினோம்.



# நாமே மலராகலாம்!

—வெ.இறையன்பு

**கோடையில் நடுத்தர மக்களுக்கு ஏற்ற 'ஜில்' இடங்கள் எவை?**

''கோடையில் அதிகக் குளிரோ அதிக வெப்பமோ இல்லாத பல மலை வாச ஸ்தலங்கள் தமிழகத்தில் இருக்கின்றன. ஏற்காடு, கொல்லிமலை, ஏலகிரி ஆகிய மூன்று இடங்கள் முக்கியமானவை. அங்கே நடுத்தர மக்கள் தங்குவதற்கேற்ற இடமும், உண்ண உணவும், இன்பமாகப் பொழுதைக் கழிக்க சகல வசதிகளும் இருக்கின்றன.''

**ஏலகிரி போன்ற இடங்கள் ஏன் அதிகமாகப் பிரபலமாகவில்லை?**

''தமிழகத்தில் எண்ணற்ற சுற்றுலாத் தலங்கள் இயற்கை எழிலோடும் பசுமை வளத்தோடும் அமைந்திருக்கின்றன. வருகிற சுற்றுலாப் பயணிகள் பலதரப்பட்டவர்களாக இருக்கிறார்கள். இளைஞர்கள், சிறுவர்கள், இயற்கைப் பிரியர்கள், ஆன்மிகவாதிகள் என்று அனைத்துத் தரப்பினரையும் மகிழ்ச்சியில் ஆழ்த்தும் இடங்களே பெரிய அளவில் பேசப்படுகின்றன.

இன்னும் வளர்ச்சி அடையத்தக்க ஆற்றல் உள்ள இடங்களில் இதுபோன்ற வசதிகளைச் செய்ய தனியார் முன் வர வேண்டும். அதற்காக அரசு ஊக்கத் தொகை அறிவித்திருக்கிறது. அரசு கட்டமைப்பு வசதிகளை அந்த இடங்களில் ஏற்படுத்தி வருகிறோம். கடந்த மூன்றாண்டுகளில் பூங்கா, கூடுதல் படகுத் துறை, ஏரியை அழகுபடுத்துதல், கோடை அரங்கம் அமைத்தல் போன்ற பல வளர்ச்சிப் பணிகள் ஏலகிரியில் நடந்துள்ளன.''

**தமிழக மக்களிடையே சுற்றுலா**



***பற்றிய எண்ணம் எப்படி இருக்கிறது?***

''விடுமுறைக் காலங்களில் சுற்றுலா செல்கிற மனநிலை முன்பு இருந்துள்ளது. அண்மைக்காலமாக ஏற்பட்ட விழிப்புணர்வின் காரணமாக வார இறுதி நாட்களிலும் அதிக அளவில் சுற்றுலா மேற்கொள்ள ஆரம்பித்திருக்கிறார்கள். சுற்றுலாவை இன்னும் விரிவாக அணுகி இடங்களைப் பார்ப்பதோடு மட்டுமே நின்று விடாமல், இயற்கையை நுகர்வதையும், பண்பாட்டை அணுகுவதையும் நமது கடமையாக நினைக்கவேண்டும்.''

***அழகான இடங்களைச் சிதைப்பவர்கள் குறித்து?***

''தமிழக அரசு 'விருந்தினர் போற்றுதும், விருந்தினர் போற்றுதும்' என்கிற திட்டத்தின் கீழ் சுற்றுலா நட்புப் பண்பாட்டை வளர்க்க பல முயற்சிகள் எடுத்து வருகிறது. சுற்றுலாத் தலங்களில் தூய்மையைப் பேணவும், நினைவுச் சின்னங்களை சின்னாபின்னப்படுத்தாமலிருக்கவும் விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகிறது. 'சிற்பக் கலையை அற்பச் செயலால் அழுக்காக்கலாமா?' என்பது போன்ற விளம்பரங்களை வெளியிட உள்ளோம். பல்வேறு மட்டங்களில் இது குறித்து விழிப்புணர்வு முகாம்களை நடத்தி வருகிறோம்.''

***மனத்தை எப்பொழுதும் 'ஜில்'லாக வைத்திருக்க நீங்கள் சொல்லும் டிப்ஸ்?***

''எந்தப் பணியைச் செய்தாலும் அதை மகிழ்ச்சியோடு செய்கிறபோது, மன அழுத்தத்திலிருந்து விடுபட முடியும். செடிகளுக்கு நீர் வார்க்கும்போது நாமே மலராவதைப் போன்ற எண்ணத்துடன் அதைச் செய்தால், அயர்வும் வராது; அழுத்தமும் வராது. வீட்டுக்குள்ளேயே இருந்தால் இல்லமே சிறையாகி விடும். அடிக்கடி காலார நடப்பதும், சேமித்த பணத்தில் வெளியூர்களுக்கு சுற்றுலா செல்வதும் நம் இறுக்கத்தைத் தளர்த்தும். பரந்த வெளிகளில் பயணம் செய்கிறபோது மனமும் விசாலம் அடையும். நல்ல அதிர்வுகளுடன் காலைப்பொழுதைத் தொடங்குபவர்களுக்கு, கவலைகளுடன் கால்பந்தாடும் உற்சாகம் வந்து விடுகிறது.''

**- நளினி சம்பத்குமார்**





✱ நிறைய அவகாசம் இருந்த காலம்...

# புதிய யுக்தி...

இளம்பிராயத்தில் ஏற்படும் காதல் எல்லாம் சாதாரணமாக மூப்பு வரை தொடர்வது சாத்தியமில்லை. சில வகைப் பட்ட காதல்கள் விதிவிலக்கு. புத்தகம் படிப்பது, இயற்கை எழிலைக் கண்டு பரவசப்படுவது, சங்கீதத்தை ரசிப்பது ஆகியவற்றின் மேல் ஏற்படும் காதலுக்கு காலவரையறை கிடையாது.

பள்ளிப்பருவத்தில் கதை படிக்கும் ஆர்வம் எனக்கு வெறியேற்படுத்திய ஒன்று. அது இன்னும் தொடர்கிறது. கிடைத்த புத்தகங்களையெல்லாம் பள்ளிக் குச் செல்லும் ஒரு மணி நேரப் பேருந்துப் பயணத்தில் படிப்பேன். தமிழ்க் கதை களில் தோன்றிய ஆர்வத்துக்கு அன்று எங்கள் வீட்டில் வரவழைக்கப்பட்ட பிரபல வாரப் பத்திரிகைகளான கல்கி, விகடன், குமுதம் மற்றும் மாதப் பத்திரி கையான கலைமகள் ஆகியவையே தூண்டுதலாக இருந்தன. தரமாக இருக்கும் முத்திரை பதித்த சிறுகதைகளுக்கும் அப் போது மிகுந்த கிராக்கி. வீட்டில் மணிக் கணக்கில் தொடர்கதைகளையும் சிறு கதைகளையும் அலசி விவாதிப்போம். நான் பயணித்த பள்ளி, கல்லூரிப் பேருந்து களில் நான் வாரம்தோறும் படித்த கதை களைச் சூட்டோடு சூடாக ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சொல்வதைக் கேட்க எப்பவும் ஒரு கூட்டம் இருக்கும். பரீட் சைக்குக் கிளம்பும் நாட்களிலும் நான் கிளம்புவதற்குள் வெள்ளிதோறும் வந்து விடும் பத்திரிகைகளைப் புரட்டி அந்த வாரத் தொடரைப் படித்து விட்டுத்தான் கிளம்புவேன். பாடங்களில் எனக்குத்தான் முதல் மதிப்பெண் என்பதால் வீட்டில் யாரும் அதற்குத் தடை விதித்ததில்லை.

நிறைய அவகாசம் இருந்த காலம் அது. மனசு சிதறி விடாமல் ஆரோக்கியமாக ரசனைகளை வளர்த்துக் கொள்ளும் சூழல் இருந்தது. அதனால் மாணவப் பரு வத்திலும் வார இதழ் தொடர் களைப் படிக்கும் ஆர்வம் இளைஞர்களுக்கு இருந்தது. இன்றைய இளைய தலை முறையினரின் கவனத்தை ஈர்க்க பல்வேறு சாதனங்கள் வந்துவிட்டன. இது டிஜிட் டல் யுகம். எலெக்ட்ரானிக் பொழுதுபோக்கிகள் வந்து



✱ இது டிஜிட்டல் யுகம்

விட்ட காலம். நிதானம் என்பது கைநழுவிப் போய்விட்டது. நிற்க நேரமில்லாமல் ஆண்களும் பெண்களும் பணிக்காக ஓடவேண்டிய கட்டாயம் இப்போது. வேகம் என்பதே அதன் அடையாளச் சொல்லாகிவிட்டது. ரசனை அதற்கேற்ப மாறுவது இயல்பு.

**உ**லகமயமாக்கலும் சந்தைப் பொருளாதாரமும் மத்திய வர்க்கத்தை நேரடியாகத் தாக்குவதால் அங்குதான் அதிக மாற்றங்கள் முதலில் ஏற்படும். தமிழர்களிடம் ரசனை மாறியது மட்டுமல்ல, அதன் திசை திரும்பிவிட்டது. தாராளமயமாக்கலினால் தனியார் தொலைக்காட்சி நிறுவனங்கள் வளர வாய்ப்பு கிடைத்ததன் விளைவாக, தமிழர்களின் வாழ்க்கை முறையே மாறிவிட்டது. யதார்த்தமான வாரப் பத்திரிகை தொடர்கள், கதைகள் இப்போது சலிப்பூட்டுகின்றன. திடீர்த் திருப்பங்கள், மிகையான பாத்திரப் படைப்புகள் என்கிற சீரியல்கள் அவர்களுக்குப் பழகிவிட்டன. தொலைக்காட்சி என்பது மிகப் பெரிய போதை. அதிலிருந்து தமிழ்ப் பெண்களை மீட்பது அவர்களது சுய முயற்சியால் மட்டுமே சாத்தியம். அவர்களுக்குப் பத்திரிகைகளை மேலோட்டமாகப் பார்க்கக்கூட இப்போது நேரமில்லை.

# புதிய ரசனை!

-வாஸந்தி

ஒரு பெரிய வாசக வட்டத்தால் கைவிடப்பட்டுவிட்ட வாரப்பத்திரிகைகள் நிலைகுலைந்து போகின்றன. ஆறு லட்சம் ஐந்து லட்சம் பிரதிகள் விற்பனை என்று விளம்பரப்படுத்திய இதழ்கள் விற்பனையில் ஏற்படும் சரிவை எப்படி சமாளிப்பது, எப்படி புதிய ரசனைகளை உருவாக்குவது என்கிற போட்டா போட்டியில் புதிய புதிய யுக்திகளை முயற்சி செய்கின்றன. இளைய தலைமுறையை வளைப்பதில் மும்முரமாக இருக்கின்றன. வெறும் துணுக்குகளும் சினிமாச் செய்திகளும் அடங்கிய பத்திரிகைகளாகத் தோற்றம் எழுப்புகின்றன. அவர்களது வியூகம் வெற்றியளிப்பதாகவும் இருக்கலாம். பத்திரிகை நடத்துவதும் வியாபாரம்; சமூக சேவை இல்லை என்கிற நிலை உருவாகிவிட்டது. நல்ல பத்திரிகைகளும் பலதரப்பட்ட வாசகர்களைச் சென்றடையும் பொருட்டு சமரசம் செய்துகொள்ளும் பரிதாப நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றன.



மணித்துளி நேரத்தில் புரட்டப்படும் பத்திரிகை துக்கடாக் குவியலாகவே இருக்க வேண்டியது காலத்தின் கட்டாயம். தொடர் நாவல் படிக்க யாருக்கும் நேர மில்லை, ஆர்வமும் இல்லை என்ற முடிவு எடுக்கவேண்டியிருக்கிறது. இருந்தும் பல பாரம்பர்ய ரசனை கொண்டவர்களுக்காக ஒரு தொடர் போடலாம்; ஆனால் கதாசிரி யர்களுக்கு ஒரு நிபந்தனை விதிக்கப்படும்: அத்தியாயங்கள் மூன்று பக்கத்துக்கு மிகைப்படாமல் இருக்கவேண்டும். இந்த நிபந்தனையால் சோர்ந்து போகாத ஆசிரி யர் இருக்கமுடியாது.

ஆனால் புத்தகம் வாங்கிப் படிக்கும் ஒரு தலைமுறை உருவாகிவிட்டதால், எழுத்தாளர்களுக்கு இதில் ஏதும் நஷ்ட மில்லை. கடந்த 25 ஆண்டுகளில் தமிழ் நாட்டில் சத்தமில்லாமல் ஒரு புரட்சி நடந் திருக்கிறது. இலக்கியம் படிக்கும் ஆர்வம் கொண்ட ஒரு தலைமுறை உருவாகியிருக் கிறது. புத்தகம் வாங்கிப் படிப்பவர் எண்ணிக்கை வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத அளவுக்குத் தமிழ்நாட்டில் அதிகரித்திருக்கிறது.



**தொலைக்காட்சி என்பது மிகப் பெரிய போதை. அதிலிருந்து தமிழ்ப் பெண்களை மீட்பது அவர்களது சுய முயற்சியால் மட்டுமே சாத்தியம்.**

பத்திரிகை விற்பனையை அதிகரிக்க பத்திரிகைத் துறை ஈடுபட்டு வரும் சர்க் கஸுக்கும் படைப்பாளிகளுக்கும் சம்பந்த மில்லை. முன்பு படைப்பாளிகளுக்கு ஏதாவது ஜனரஞ்சகப் பத்திரிகையில் தங்கள் படைப்பு வந்தால்தான் வாசகர் களின் கவனத்தைப் பெறமுடியும் என்கிற எண்ணம் இருந்தது. இப்போது பெயர் தெரியாதவர்களின் சிறுகதைத் தொகுப்பு கள், நாவல்களைக்கூட அச்சிட பதிப்பகங் கள் தயங்குவதில்லை. வாங்க ஆட்கள் இருக்கிறார்கள். வருடந்தோறும் சென்னை புத்தகக் கண்காட்சி யில் அதிகரிக்கும் புத்தக விற்பனையே அதற்குச் சான்று. புத்தக வெளியீட்டு விழா அதற்கான வியூகமாகி விட்டது. வாங்கிப் படிப்பவர் கள் அதைப் பற்றி விவாதிக் கிறார்கள். வலைத் தளங்களில் விமர்சனங்கள் வருகின்றன. வரும் புத்தகங்களில் நல்லவையும் அல் லாதவையும் உண்டுதான், எல்லாத் துறை களிலும் இருப்பதுபோல. நல்லவையே பேசப்படுகின்றன என்பது முக்கியம். பிரபல வாரப் பத்திரிக்கைகளில் இடம் பெறாத பல சிறந்த எழுத்தாளர்கள் தோன்றியிருக்கிறார்கள். இலக்கிய சிறு பத்திரிகைகளில் மிக அருமையான படைப்புகள் வெளியாகின்றன. உண்மை யில் தமிழில் நல்ல எழுத்துக்கு இது பொற் காலம்.

தமிழ் எழுத்தாளர்கள் வளமாக இருக் கிறார்களா? அதை மட்டும் கேட்கக் கூடாது. தமிழர்கள் எழுத்தால் எத்தனை சம்பாதிக்க முடியும் என்பது சிதம்பர ரகசியம்!

**ஸ்லம்டாக் மில்லியனர், விகாஸ் ஸ்வரூப், தமிழில் : ஐஷ்வர்யன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை-2. விலை ரூ. 120.00**

ஆஸ்கார் வென்ற ஸ்லம்டாக் மில்லியனர் திரைப்படத்துக்கு அடிப்படையாக அமைந்த Q&A நாவலின் தமிழாக்கம். இதுவரை 36 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள இந்நாவலில், திரைக்கதையில் காணப்படும் அதே விறுவிறுப்பு குறையாமல் உள்ளது. பின்னோக்கு நிகழ்வுகளில் நாவல் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. பாத்திரங்களிடம் இயல்பாகத் தோன்றும் பரிதாப உணர்வு நாவலுக்கு வலுசேர்க்கின்றது. ஆஸ்கார் வெற்றிக்குப் பிறகு தமிழில் வெளியாகியிருப்பது நூலின் கூடுதல் பலம்.




**நிசி அகவல், அய்யப்பமாதவன், ஆழி பதிப்பகம், கோடம்பாக்கம், சென்னை-24. விலை ரூ.60.00**

மிகவும் மனம் ஈர்த்து மறுவாசிப்பு செய்யத் தூண்டும் கவிதைகள், மறுவாசிப்பு செய்து புரிந்துகொள்ளப்பட வேண்டிய கவிதைகள், புரிதல் என்ற எல்லையைத் தாண்டி வாசிக்கும்போதே அதிர்வுகளை ஏற்படுத்தும் கவிதைகள் கொண்ட தொகுப்பு. நவீன இலக்கிய வாசகர்களைத் தாண்டி ஒரு மகிமை, நீர் உள்ளிறங்கும், வதைபடுகளம் போன்ற கவிதைகள், எளிய வாசிப்புக்கும் இடம்கொடுத்து ஈர்க்கின்றன; நடுநிசியில் நட்சத்திரங்களாய்.




# நடுநிசி நட்சத்திரங்கள்!




**வழிகாட்டும் வள்ளுவன், புவனகிரி செயபாலன், தமிழ்ச்செல்வி பதிப்பகம், விருத்தாசலம். விலை ரூ.70.00**

விருத்தாசலம் நகராட்சியின் செயல்பாடுகளைப் பற்றிய ஒரு பதிவு, அந்நகராட்சியை ஊழல், லஞ்சம் போன்ற செயல்பாடுகளிலிருந்து விடுவிக்க மேற்கொண்ட முயற்சிகளும் நூலில் விவரிக்கப்பட்டுள்ளன. ஜனநாயகத்தின் புதல்வர்களாய் இருந்தாலும் தாங்கள் எப்படியெல்லாம் ஏமாற்றப்படலாம் என்பதை மக்கள் அறிந்துகொள்ளும் வாய்ப்பையும் இந்நூல் வழங்குகிறது.

- நேயமுகில்

## புத்தக விமர்சனம்



நெரிசல் மிகுந்த சுருளிப்பட்டி டவுன் பஸ்ஸிலிருந்து கம்பம் பஸ் ஸ்டாண்ட் வந்து இறங்கும் வரை அவளை ஏதோ இரு இளமையான கண்கள் உற்றுநோக்குவதாகப்பட்டது. பஸ் நெரிசல்களுக்கிடையே அந்த நெருக்கமான கண்களைத் தேடத் தொடங்கினாள். ஒடிந்த

தேகமாய் வளர்ந்திருந்த சிவக்குமாரின் கண்களைப் பார்க்க நேர்ந்தது. பஸ்ஸில் இவள் நின்றபடியோ அல்லது அமர்ந்தபடியோ இருக்கும் இடத்துக்கு எதிராக நின்று அவன் காதல் தோய்ந்த விழிகளால் இவளைப் பார்த்துக் கொண்டிருந்தான்; தொடர்ந்து சில நாட்களாய். அவளுக்குள் தீராது ஒளிந்து கொண்டிருக்கும் வாசனை அவனுக்குத் தெரியாதவண்ணம் தினமும் மல்லிகைப் பூவைச் சூடி மறைக்க முயன்றாள். தூரத்தில் நின்றுகொண்டிருந்தாலும் இவள் மனத்துக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் காதல் வாசனையை உணர்ந்தான் அவன்.

ஒருநாள் காதலின் தீவிரம் தாங்காது இவள் அமர்ந்திருக்கும் சீட்டுக்குப் பக்கத்தில் வந்து இவள் மேல் மெதுவாகப் பட்டும் படாமல் நின்றான். இவள் உடனடியாகத் தன் உடலைக் குறுக்கி சீட்டின் உட்புறம் இழுத்து அமர்ந்தாள்.

சிவக்குமாரின் கண்களைத் தவிர்த்து, எப்போதும் தன் கையில் இருக்கும் கோல நோட்டைத் திறந்து, சித்ரா என்று தன் பெயரைப் பெரிதாக எழுதினாள். அவள் எழுதுவதையே பார்த்துக் கொண்டிருந்தவன், இவள் பெயரைச் சத்தமாக உச்சரித்தான். கண்டக்டர் பயணிகளை எண்ணிவிட்டு யாரோ ஒருவர் டிக்கெட் வாங்கவில்லை என்று கத்திக் கொண்டிருந்தார். அப்போதுதான் சித்ராவுக்கு சுயநினைவு வந்தது.

ஒரு சின்ன அவமானத்துடன் கண்டக்டரிடம், ''ஒரு கம்பம்'' என்றாள். ''ஏம்மா எந்த உலகத்திலே இருக்க? கம்பமே வந்திருச்சு'' என்று திட்டினார்.

இவள், பக்கத்தில் நின்று கொண்டிருந்த சிவக்குமாரிடம் காசை நீட்ட, அவன் டிக்கெட்டை வாங்கி அவளிடம் கொடுத்த போது, தற்செயலாய் அவன் விரல்கள் அவள் விரல்களை வருடின. சன்னமாக அவளுக்கு மட்டும் கேட்கும் குரலில், ''என் பெயர் சிவக்குமார்'' என்றபடி, அவன் வழக்கமாக இறங்கும் போலீஸ் ஸ்டேஷன் ஸ்டாப்பில் பஸ் நகரும் தருணத்தில் இறங்கி வேகமாக ஓடினான். சித்ரா மனம் பதைத்து அவன் விழாமல் சரியாக நின்று விட்டானா என்று பார்த்தாள். அவன் தம்பீஸ் தியேட்டர் நோக்கி நடந்து கொண்டிருந்தான். அவள் பஸ் ஸ்டாண்ட் பொதுக் கழிப்பறை வாசலில் இறங்கிக் கொண்டாள்.

# தோல்வியின் ஆசுவாசம்

**சந்திரா**

**சி**த்ரா அமர்ந்திருந்த இரும்பு நாற்காலி சாயம் இழந்து, பிய்ந்து போய் அதன் கால்களின் முனைகள் எப்போதும் இலேசாக ஆடிக்கொண்டிருந்தன. பின் முதுகில் வலி ஏற்படும்போதெல்லாம் நாற்காலியில் சாய்ந்திருக்கும் முதுகை நிமிர்த்தி நெஞ்சை முன்னகர்த்தி ஆசுவாசம் அடைவாள். ஆனால் இன்று அவள் மனம் முழுக்க புழுக்கம் விலகாமல் தொடர்ந்தபடி இருந்தது. நெஞ்சில் அடர்ந்திருந்த வெறுப்பின் புகைச்சலைக் குறைக்க முயன்றுகொண்டிருந்தாள். அவள் நாற்காலியில் சாயும் நேரம் மிக மிகக் குறைவாகவே இருந்தது. அட்டை

கிழிந்த நோட்டில் கையில் அவன் மனத்துக்கு விரும்பிய அளவில் புள்ளிகளை இட்டு நிரப்பி, புதுப்புதுவிதமான கோலங்களை உருவாக்கிக்கொண்டிருந்தாள். ஒரு பொதுக் கழிப்பறை வாசலில் அமர்ந்து அவள் வேறு என்னதான் செய்ய முடியும்? அவள் நாற்காலிக்கு அருகில் மிதிபடும் செருப்புத் தடங்களும், கால் தடங்களும் தன் உடலின் மீது தீராத கழிப்பறை வாசனையை ஏற்படுத்தி இருப்பதாக உணர்ந்தாள். தன்னைத்தானே நுகர்ந்தபடி இருக்கும் இந்த வாழ்க்கை அவளுக்கு மிகப் பெரும் துயரத்தைத் தந்தது.

சிவக்குமாரின் இன்றைய செயல்கள் சித்ராவுக்கு பயத்தையும் சந்தோஷத்தையும் ஒருசேரக் கொடுத்தன. அவள் முதன்முதலாகக் காதல்வயப்பட்டிருந்தாள். இப்படி ஊரே பார்க்க பஸ் ஸ்டாண்ட் கழிவறை வாசலில் அமர்ந்து பணம் சேகரிக்கும் தன்னைப் பார்த்தால் அவன் விரும்பமாட்டான். தனக்குள் இருக்கும் கழிவறை வாசனையை அவனும் தெரிந்துகொள்வான். அவளைப் பார்த்தபடி உற்சாகத்தில் அவன் படியிலிருந்து இறங்கி ஓடிய சித்திரமும், கை விரல்களை நெருடும்போது இருந்த கண்ணீர் ததும்பும் அன்பும், அவனின் தீர்க்கமான பார்வையும் அவன் ஏற்றுக் கொள்வான் என்று நம்பிக்கை தந்தது. தன் வேலை காரணமாகத் தன்னை நிராகரிக்க மாட்டான் என்றே அவளுக்குத் தோன்றியது. அவன் பெயர் சொன்னது காதுக்குள் இனிமையான ஒலியை ஏற்படுத்திக் கொண்டே இருந்தது. இன்று அவள் கோல நோட்டில் புள்ளிகளும் கோலங்களும் இடம்பெறாமல், சிவக்குமார் என்ற பெயரே நிரப்பப்பட்டிருந்தது. அன்று கழிப்பறையை உபயோகிக்கச் செல்லும் ஆண் பெண் உருவங்களின் நினைவுகளையோ செயல்களையோ... அவள் ஞாபகத்தில் எடுத்துக் கொள்ளவில்லை. ஒளி நிறைந்த அவன் கண்கள் மட்டுமே நெருப்பாய் மனம் முழுக்கக் கனன்று கொண்டிருந்தன.

ஈரம் படிந்த காசுகளை வாங்க அவளுக்கு ஒருபோதும் விருப்பம் இருந்ததில்லை. முன்பு 700 ரூபாய் சம்பளத்துக்கு ஜெராக்ஸ் கடையில் வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். அதில் பாதி பணம் பஸ் டிக்கெட்டுக்கே செலவாகிவிட்டிருந்தது. அவள் வீட்டுக்கு அருகில் வசித்த கழிவறை காண்ட்ராக்டர் 1000 ரூபாய் சம்பளம் கொடுத்து டிக்கெட் காசையும் கொடுப்பதாகச் சொன்னதும், அவள் அம்மா வற்புறுத்தி இந்த வேலைக்கு சித்ராவை



அனுப்பிவிட்டாள். பணம் திருடும் பழக்கம் இல்லாத சித்ராவின் வேலை காண்ட்ராக்டருக்குப் பிடித்திருந்தது. அவர் அவளை மிகவும் நாகரிகமாகவே நடத்தினார்.

பெண்கள் கழிப்பறைக்குக் காசு சேகரிக்கும் வேலையாக இருந்தால்கூட அவள் மனம் சமாதானம் அடைந்திருக்கக்கூடும். காசு கொடுத்துச் செல்லும் ஆண்களின் உடல் சேட்டைகளும், காசு கொடுக்கும்போது வேண்டுமென்றே கைதொட்டுச் செல்வதும் அவளுக்குள் அருவருப்பைத்

தூண்டிக் கொண்டே இருந்தன. ஒரு நாளைக்கு ஆயிரம் முறையாவது தன் கைகளைப் பாவாடையில் அனிச்சையாகத் துடைத்துக் கொள்வாள்.

இப்போது அவள் மனம் முழுக்க சிவக்குமார் என்ன வேலை செய்வான் என்ற எண்ணம் ஓடியது. அவன் ஆடை அணிந்திருந்தவிதமே அவளுக்குப் பயத்தைக் கிளப்பியது. ஒரு நாகரிகமான வேலைக்குச் செல்பவன் உடுத்தும் ஆடையைப் போல அவன் உடுத்தியிருந்தான். தானும் இனி மேல் சாயம் இழந்த தாவணிகளைக் கட்டுவதைத் தவிர்க்க வேண்டும். நீளமான கூந்தலில் எப்போதும் மல்லிகைப் பூவைச் சூடிக்கொள்ள வேண்டும். தாவணிக்கு மேட்ச்சாக வளையல்கள் போட்டுக் கொள் வேண்டும் என்றெல்லாம் திட்டமிட்டாள்.

நிச்சயம் சித்ரா ஏதாவது ஒரு ஏ.சி. அறையில் கம்ப்யூட்டர் முன்னாடி உட்கார்ந்து வேலை பார்த்துக் கொண்டிருப்பாள் என்று நினைத்தான். டிக்கெட் கிழித்துக் கொடுக்கும் வேலையைச் செய்யும் தன்னை அவள் விரும்புவது சாத்தியம் இல்லை. ஆனால் அவள் கண்கள் காதல் செய்தியினைப் படபடத்தன. அவன் இறங்கி ஓடும்போது அவள் மனம் பதைத்ததையும் அவன் கவனிக்கத் தவறவில்லை.

அவள் சினிமா பார்க்க வர, தான் டிக்கெட் கிழித்துக் கொடுப்பதை நினைத்துப் பார்க்கவே அவனுக்கு பீதியாக இருந்தது. அதன் பின் அவள் தன்னைத் திரும்பிப் பார்க்க மாட்டாள். ஒருபோதும் அவள் தம்பீஸ் தியேட்டருக்கு சினிமா பார்க்க வரக்கூடாது. அதற்குள் அந்தத் தியேட்டரிலேயே மேனேஜராகப் பதவி உயர்வாவது கிடைக்கவேண்டும் என்று விரும்பினான்.

**"ஏன் பொதுவா மெகா சீரியல்கள் எல்லாம் வாரத்துக்கு அஞ்சு நாள் மட்டும் இருக்குது?"**

**"மிச்ச ரெண்டு நாள்ல தாய்க்குலங்கள் கண்ணீரை ரீ-சார்ஜ் பண்ணிக்கத்தான்!"**

**- வெ.சீதாராமன்**

தினமும் இருவரும் ஒரே நேரத்தில் பஸ்ஸில் பயணம் செய்தார்கள். ஆனால் வார்த்தைகள் வெளிவராமல் கண்கள் மட்டுமே காதலைப் பகிர்ந்து கொண்டன. வேலை நிமித்தமான இருவரின் பயம்தான் அதற்குக் காரணம். இருவரும் தங்களிடம் இருந்த மிக அழகான ஆடைகளை உடுத்திக் கொண்டார்கள். எப்போதும் ஒருவிதப் படபடப்பிலே இருந்தார்கள். அவளைப் பின்தொடர்ந்து அவள் வேலை செய்யும் இடத்தை அறிந்துகொள்ள ஆசைப்பட்டான். ஆனால் அதன்பின் அவளின் நாகரிகமான வேலை தன் காதலைப் பின்வாங்கச் செய்துவிடுமோ என்று பயந்தான். அவன் எங்கு வேலை செய்கிறான் என்று நினைக்கவே அவள் பயந்தாள்.

உலகத்தின் அசைவுகளை மறந்து அவளின் வட்டமுகத்தை யோசித்தபடி வெயிலில் தம்பீஸ் தியேட்டருக்குள் நுழைந்தான் சிவக்குமார். ஆறாவது வரை மட்டுமே படித்துவிட்டு, படிப்பு வராது பள்ளிக்குப் போகாமல் ஊரைவிட்டு ஓடியதை நினைத்து இப்போது வெட்கப்பட்டான். எப்பாடுபட்டாவது பத்தாவது வரை படித்திருந்தால் ஒரு நல்ல வேலைக்குப் போயிருக்கலாம். தன் வேலையை சித்ரா அறிந்து கொண்டால் தன் காதல் வாழ்வு அழிந்துவிடுமோ என்று பயந்தான். நேற்று வரை வேலை நிமித்தமாகக் குறைபட்டுக் கொள்ளாத மனது, இன்று அல்லாடியது.

'குறைந்த சம்பளமாக இருந்தால்கூட பரவாயில்லை; ஜெராக்ஸ் கடைக்கே திரும்ப வேலைக்குப் போகிறேன்'



**எல்லோரையும் போல கழிவறைத் தடங்களை அவள் மேஜை அருகே விட்டு விட்டு அந்த இடத்திலிருந்து நகர்ந்தான்.**

என்று அம்மாவிடம் கேட்டுப் பார்த்தாள். 'ஒழுங்கா இந்த வேலையைப் பாரு. செருப்பால் அடிப்பேன்' என்று அவள் அம்மா அடிக்க வந்து விட்டாள்.

சிவக்குமார் மிக மெதுவாக தியேட்டர் ஓனரிடம், தான் உள்ளே உட்கார்ந்து கணக்கு வழக்கு பார்க்கிறேன் என்று கேட்டுப் பார்த்தான். 'அறிவுகெட்டவனே ஆறாவது படிச்ச நீயி கணக்கு பார்க்கறீயாக்கும். கொஞ்ச நாள் பொறு... கவுண்டருக்குள்ள உட்கார்ந்து டிக்கெட் குடுக்கிற வேலையைப் பார்க்கலாம்' என்றார். அவன் பேசாது மௌனமாக இருந்தான்.

காதலை இன்று சொல்லிவிடலாம் நாளை சொல்லிவிடலாம் என்ற தவிப்பிலும், அதே சமயம் தங்கள் வேலையை நினைத்து தங்களுக்குள் கழிவிரக்கம் மேலிட காதல் உடைந்த குமிழாகி விடுமோ என்ற பயத்திலும் பேசாமல் இருந்தனர்.

அன்று...

கழிவறை வாசலிலிருந்து வழிந்தோடிய தண்ணீர், சேரில் தொங்கப்போட்டு உட்கார்ந்திருந்த அவள் கால்களை நனைக்க, கால்களைத் தூக்கி இருக்கையில் அமர்த்திக் கொண்டாள். வழக்கம் போல நோட்டில் கிறுக்கிக் கொண்டிருந்தவள் அவளைக் கடந்து கழிவறைக்குச் செல்லும் ஆண் உருவத்தைப் பார்த்து மனம் சிறுத்து நடுங்கினாள். அவள் மனத்தை அறுத்துக்கொண்டிருந்த கழிவறை வாசனையின் தீவிரம், இன்று தன் வாழ்வில் பெரும் புயலைக் கிளப்பப் போகிறது என்ற முடிவுக்கு வந்தாள்.

அவளுக்குக் கொடுக்கப் போகும் நாணயத்தை பாக்கெட்டிலிருந்து எடுத்துப் பார்த்தான் சிவக்குமார். இதற்கு முன் பலமுறை பணம் வாங்கி டிக்கெட் எடுத்துவிட்டு, மீதி நாணயங்களை, மிகப்பெரும் காதல் பேசும் கண்களுடன் உயிர்த் தொடுதலாய் அவள் கைகளை வருடிக் கொடுத்திருக்கிறான். இன்று அவளுக்குக் கொடுக்கப் போகும் நாணயம் மிக முக்கியமாகப் பட்டது. சித்ரா பேய் பிடித்தவள்போல பார்வை விலகாது ஒரே திசையில் பார்த்து, நடக்கப் போவதை எதிர்நோக்கிக் காத்திருந்தாள்.

ஈரம் படிந்த இரண்டு ரூபாய் நாணயத்தை அவள் விரல் தொடாமல் அவளிடம் கொடுத்தான் சிவக்குமார். அவள் புன்முறுவலுடன் நாணயத்தை வாங்கி, தன் கைப்பையில் பத்திரப்படுத்திக் கொண்டாள். அவளைத் தெரியாதவன் போல, எல்லோரையும் போல கழிவறைத் தடங்களை அவள் மேஜை அருகே விட்டுவிட்டு அந்த இடத்திலிருந்து நகர்ந்தான். அவன் செருப்புத் தடங்கள் அவள் மனத்தில் படிந்து தேங்கின. அதற்குப் பின் அவர்கள் ஒருபோதும் பஸ்ஸில் டிக்கெட்டுகளையும் நாணயங்களையும் பரிமாறிக் கொள்ளவில்லை. அவள் கண்களிலிருந்து விலகிப் போய்விட்டிருந்தான் அவன். அவள் கழிப்பறையில் பணம் சேகரிக்கும் வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டிருந்தாள். அவனின் வெளியேறல் அவளுக்குத் துயரத்தைத் தரவில்லை. உண்மையில் ஆசுவாசத்தைக் கொடுத்தது. அவள் ஒரு பொய்யான காதலை விரும்பவில்லை. ●

# தர்ம சக்தி

அருள்வாக்கு

இந்த தேசத்தின் உசந்த சமுதாயம், மேலேழ வெளியிலே பார்க்கிறதற்கு மட்டும் ஒருமைப்பாட்டு கோஷம் என்ற ஒரு 'ஷோ'வோடு, உள்ளுக்குள்ளே பிரிந்து, பிரிந்து, பிரிந்து வீணாய்ப் போய்க் கொண்டிருக்கிறது. ரொம்பவும் துக்கமும் வெட்கமும் படும்படியான ஸ்திதி: பொது எதிரி ஒருத்தன்கிட்டே விரோதத்தில்தான் நமக்கு ஒன்று சேரத் தெரிந்ததே தவிர, நமக்குள்ளே பரஸ்பர ப்ரேமையில் ஒன்று சேரத் தெரியவில்லை!

இந்த பாரத தேச கலாசாரத்துக்கு லோகத்திலேயே வேறே எந்தப் பெரிய 'ஸிவிலிஸேஷ'னுக்கும் இல்லாத தீர்க்காயுசைக் கொடுத்து யுகாந்தரங்களாக ரக்ஷித்துக் கொண்டு வந்திருக்கிறது அந்த தர்ம சக்திதான். அப்படி ஒன்று இருக்கிறது என்று தப்பித் தவறியாவது தற்காலத்தில் தலைவர்கள் என்று இருக்கிறவர்கள் தங்கள் தங்கள் கட்சிக்காரர்களுக்குச் சொல்கிறார்களா என்று தெரியவில்லை! எலெக்ஷனில் ஜெயிப்பது ஒன்றைத் தவிர வேறே ஒரு லக்ஷ்யத்தையும் கட்சிக்காரர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதில்லை என்ற துர்தசை ஏற்பட்டிருக்கிறது! ஜயிப்பதுதான் குறி என்கிறபோது hook or crook, எதுவானாலும் சரி என்று அதர்மத்துக்கும் கட்சிக்காரர்களைத் தூண்டிக்கொடுக்கிற வரைக்கும் போய்விடுகிறது. இந்த நிலவரத்திலே முக்கியமாக அப்போது வெள்ளைக்காரன் ஒரு தினுசில் divide and rule தந்திரம் பண்ணினானென்றால், இப்போது தலைவர்கள் எனப்பட்டவர்களும் சமுதாயத்தை அநேக மெஜாரிடி - மைனாரிடிகளாக divide பண்ணி, மெஜாரிட்டியைத் திருப்தி பண்ணுவதற்காக தர்மாதர்மத்தைப் பற்றி அவ்வளவாகக் கவலைப்படாமல் எதுவேண்டுமானாலும் பண்ணி எலெக்ஷன் வெற்றிக்கே பாடுபடுவதாகத்தான் பொதுப் படையாகப் பார்க்கிறபோது தெரிகிறது.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

கவின்கவி

# காற்றின் படம் வரைந்த காடுகள்

புல்லாங்குழலைத் தேடியபடி
பறந்து வருகிறது பட்டாம்பூச்சியொன்று
பாடையருகே

புல்லாங்குழல் வாத்தியக் கருவியில்லையென
விரலிடம் காற்று சொல்வதில்
அர்த்தமுண்டு

புல்லாங்குழலை காற்றுதான் கண்டெடுத்தது
மூங்கில் காடுகள்
மேனியில் கீறியும்...

புல்லாங்குழலில் இசைக்கப்படுகிறது
வெட்டுப்பட்ட மூங்கில்களின்
துயரம்...

புல்லாங்குழல்
காற்று, விரல், உதடு, துளை மூங்கில்,
என் காதலி என
ஐம்புலன்களால் ஆனது

புல்லாங்குழல் மீது புயல் மோத
மூங்கில் காடுகள் மட்டும்
உடைந்து போயின

புல்லாங்குழலில் பாடை செய்து
கொண்டுபோகின்றன வனங்களை
அணை கட்டிக் கொள்கிற
நதிகள்

புல்லாங்குழல்கள் நம்பினதில்லை
ஈழக காட்டின் குண்டோசையைத்
தாலி சத்தமென்று

புல்லாங்குழலின் காற்றுச் சுருதியால்
மன்னிக்கப்படுகிறது
புயலின் கர்வம்

புல்லாங்குழலை வாசிக்கத் தெரியாததால்
எத்தனைவித முத்தமிட்டும் தீரவில்லை
இதழ்களின் மோகம்

புல்லாங்குழல்களின் இசை கேட்டு
மரங்கொத்தியால் கொத்திக்கொள்கின்றன
காட்டு மரங்கள்

புல்லாங்குழலை,
மூங்கிலைத் துளைசெய்து
குழலிசையை ஒழுகச் செய்வதெனும் பார்வையாளர்கள்
வெளியேறுங்கள் கவிதையைவிட்டு

புல்லாங்குழலை வாசிக்கச் சொல்வேன் அவளை
குவியும் உதடுகளில் தெரியும்
என் முத்தங்களைக் கேட்க...

ஆயினும்...
புல்லாங்குழல்களைத் தடைசெய்யுங்கள்-
மூங்கில் காட்டில்
பறவைக் கூடு.

# நடக்குமென்பார் நடக்கும்!

**மேஷம் :** நற்பலன்கள் நிறைந்த வாரம். புதிய தொழில் முயற்சிகள் பலன் அளிக்கும். வேலையில் மாற்றம் உண்டாகும். உற்றார், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். தேர்வில் அதிக மதிப்பெண்கள் கிட்டும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**ரிஷபம்:** உல்லாசப் பிரயாணம் செல்வீர்கள். பணக் கஷ்டம் இருக்காது. புண்ணிய ஸ்தலம் சென்று பிரார்த்தனைகளை முடிப்பீர்கள். தந்தை வழி சொத்துகள் வந்து சேரும். திருமணக் காரியம் கைகூடி வரும். சனி / குரு வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**மிதுனம்:** உடல் நிலையில் கவனம் தேவை. வண்டி வாகனங்களில் செல்லும் போது உஷார். யாருக்கும் ஜாமீன் போடக் கூடாது. குடும்ப வாழ்வில் அனுசரணை தேவை. ராகு / கேது வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**கடகம்:** கல்வி வளம் மேலோங்கும். நீண்ட காலம் முடிவு பெறாமல் இருந்த வழக்கு வெற்றி அளிக்கும். கடன் தொல்லை தீரும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். மனக் கிலேசம் விலகும். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**சிம்மம்:** பணத் தேவைகள் அதிகரிக்கும். தோல்வி பயம் எதிரொலிக்கும். பகை அதிகரிக்கும். விசுவாசமானவர்கள் சந்தர்ப்ப சூழ்நிலையால் இடம் மாறிப் போவார்கள். கடன் பிரச்னை அதிகரிக்கும். சனி வழிபாடு செய்துவர நற்பலன் ஏற்படும்.

**கன்னி:** எதிரிகளை வீழ்த்தி வெற்றி வாகை சூடுவீர்கள். நற்காரியம் நிறைந்து காணப்படும். சுபச்செலவு கூடி வரும். தேர்வில் மதிப்பெண் கூடும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நன்மை உண்டாகும்.

**துலாம்:** நண்பர்களால் அனுகூலம் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல ஆதாயம் ஏற்படும். புதிய வீடு / மனை வாங்க உகந்த காலம். கடன் தொல்லையிலிருந்து விடுபடுவீர்கள். நீண்ட தூரப் பிரயாணம் செல்வீர்கள். மனக்கவலை தீரும். ராகு / கேது வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீரும்.

**விருச்சிகம்:** எதிர்பாராத பண வரவு ஏற்படும். எதிர்ப்புத் தொல்லைகள் விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். மன உளைச்சல் தீரும். வேலையில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர் / உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். குரு / சனி வழிபாடு செய்துவர சங்கடம் விலகும்.

**தனுசு:** திருமணம் தடை விலகி கைகூடும். கூட்டாளிகள் விட்டு விலக நேரிடும். யாரிடமும் அதிகப் பேச்சு வார்த்தை கூடாது. கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. உறவினர்கள் விலகிப் போவார்கள். ராகு / கேது / குரு வழிபாடு செய்துவர சங்கடம் தீரும்.

**மகரம்:** நீண்ட நாட்களுக்குப் பிறகு நல்ல நேரம் துவக்கம். கடலில் தத்தளித்

தவனுக்கு மரத்துண்டு கிடைத்தாற்போல், நல்ல நேரம் துவங்கி உள்ளது. விலகிப் போனவர்கள் விரும்பி வந்து சேருவார்கள். உடல் ஆரோக்கியம் பூரண குணமாகும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர சங்கடங்கள் தீர்ந்து நற்பலன் பெருகும்.

**கும்பம்:** திடீர்ப் பிரயாணம் செய்ய வேண்டி இருக்கும். குழந்தைகள் ஆசைகள் நிறைவேறும். கடன் சுமை தீரும். குலதெய்வப் பிரார்த்தனை நிறைவேறும். வராத கடன் வந்து சேரும். மனசஞ்சலம் தீரும். சனி / குரு வழிபாடு செய்துவர நற்பலன் அதிகரிக்கும்.

**மீனம்:** தொட்டதெல்லாம் ஜெயமாகும். குழந்தைகள் வழியில் சுபச் செலவு உண்டாகும். வியாபாரத்தில் நல்ல பலன் கிட்டும். வேலையில் நற்பெயர் ஏற்படும். கணவன் - மனைவி உறவு சுமுகமாக இருக்கும். ராகு / கேது வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

தஞ்சை பரத்வாஜ்



# 18 காற்று வரும் பருவம்

இந்த ஏழு எட்டு நாளாகவே ஜெயபால் அண்ணன் நினைவே இல்லை! நெஞ்சில் இருந்து 'அகன்று விட்டது என்று சொல்லவில்லை! எதைத் தொட்டாலும், எதைப் பார்த்தாலும் அதோடு தொங்கிக் கொண்டு, அவன் நினைப்பு வரும். இப்போது அப்படி யில்லை. நெஞ்சு நிம்மதியாக இருக்கிறது. எல்லாம் காலம்தான். இந்தக் காலத்துக்கு அப்படி ஒரு வலு! பஞ்சுவும் ஒரு நாள் இப்படித்தானோ? அவளை நினைக்க நினைக்க பலமும் சந்தோஷமுமல்லவா கூடுகிறது!

முன்பெல்லாம் அவளைப் பார்த் தாலே பரபரப்பாகிவிடும். நெஞ்சுத் துடிப்பு அலறும். நரம்பும் ரத்தமும் சூடாகிக் கொதிக்கும். 'வேண்டாம்... வேண்டாம்...' என்று சொல்லச் சொல்ல அவளை இழுத்து, திருகி தன்னோடு அணைத்துக் கொள்ள வேண்டும் போல் பரபரப்பாகி விடும். இப்போது அப்படி நினைக்க முடியவில்லை. அவளுடைய பயமும் படபடப்பும் கூச்சமும் மனசைக் கடித்துவிடுகிறது. கடிபட்ட வலியில் நெருங்க முடிய வில்லை. அவள் ஒரு சுவர் எழுப்பி, அந்தச் சுவருக்குள் குன்றிக் கொண்டி ருப்பதுபோல் தோன்றிற்று.

''என்னாலெ உங்களுக்குக் கஷ்டம்!''

''இல்லவே இல்லெ!''

''முள்ளும் கல்லுமா இருக்கே. கஷ்டமில்லாம இருக்குமா?''

''எங்கதான் இல்லெ முள்ளும் கல்லும்?''

''அதுக்காக கண்ணுலெ வெச்சு கட்டிக்கவா முடியும்?''

''கண்ண மூடிக்க.''

''மூடினா முகத்துலெ குத்திடாதா?''

''அதையே சொல்லிக்கிட் டிருக்காதே!''



''எங்காவது விழுந்து உசிரை தொலைச்சிப்பிடலாமுன்னுதேன் வருது.''

''இப்படியே பேசிக்கிட்டிருந்தா... நடக்கப் போறதப் பாரு.''

''மனச சுத்தம் பண்ணிதேன் பாக்குது. கம்பும் கத்தியுமாத்தேன் தெரியுது...''

''இப்படியே ஒதுக்கிக்கிட்டிருந்தா... என் மனசு வாதிக்குது! என்னைக் கண்டா உனக்கு ஆகலெ... அப்படியா?''

**"வேண்டாம்... வேண்டாம்... என்று சொல்லச் சொல்ல அவளை இழுத்து, திருகி தன்னோடு அணைத்துக் கொள்ள வேண்டும் போல் பரபரப்பாகிவிடும்."**



''நீங்கதான்னு சரணடைஞ்சாச்சே...''

''அப்ப கவலையை விடு...''

''அங்கதான் கவலை...''

''என்ன உளறிக்கிட்டு...?''

''என் பயம் நியாயமுன்னு உங்களுக்குப் படலெ?''

''நிச்சயமா சொல்றேன் பஞ்சு! நம்பு. எனக்கு வேற சொல்லத் தெரியலெ. ஒன் பேச்சு, வார்த்தை எல்லாம் ரொம்பக் கெட்டியாயிடுச்சு! கெட்டியா... கெட்டிக்காரத்தனமான்னு தெரியலெ! நான் வேணுமுன்னா சொல்றேன் பாரு... என்மேலே பாரத்தைப் போட்டுப் பாரு. நான் பாத்துக்கிறேன்'' என்று சொன்னான். காலை, மாலை, இரவு என்று தவறாமல் ஒரு பொழுதுகூட தவறாமல் அவன் நினைப்பு ஓடிக் கொண்டுதான் இருக்கிறது. ரத்த ஓட்டம் மாதிரி உடம்போடு கலந்து விட்டது, அது!

ஐயா படியிறங்கி விட்டார். வீடு அமைதியில் விழுந்துவிட்டது. நிலைக் கண்ணாடியைப் பார்த்துப் பார்த்து, ஒரு குருவி கொத்துகிறது. ஊதுவத்திப் புகையும் கதம்ப மணமுமாக பட்டக சாலை. மாடுகளும் மந்தைக்குப் போய்விட்டன. வீட்டின் அமைதியைக் கடிகார ஒலி சுண்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. கோவிந்து கண்ணைக் கசக்கிக் கொண்டே பட்டக சாலைக்கு வந்தான். அம்மா பிரிமனையில் தயிர் தாளியை வைத்து மத்தால் உருட்டிக் கொண்டிருந்தது.

''ஐயா எங்கம்மா போறார்?''

''ஒங்கக்காவப் பாத்திட்டு

◆ பாரதிபாலன் ◆

வாரேன்னுட்டு ஊருக்குப் போறார்!''

''என்னவாம்?''

''ஆஸ்பத்திரிக்குப் போயிட்டு வந்தாளாம்.''

''எதுக்கு?''

சற்றுத் தயங்கி நின்றாள். எப்படிச் சொல்வது? சொல்லலாமா வேண்டாமா என்ற தயக்கம். கடைசியில் 'முடியாமத்தேன்' என்று முடித்துக் கொண்டாள்.

''நானும் குளிச்சுட்டு வாரேன்.''

''ஆத்துக்கா?''

''ம்.''

''ம்... போவமா நாகு?''

''...ந்தா சோப்பு வாங்கியாந்திடுறேன். ஒனக்கு?''

''வேணாம்!''

''எனக்கு கைலி மட்டுந்தா.''

''வாங்கு.''

சிவன் பார் சோப்பில் ஒரு வில்லையை சிறுசரடால் நறுக்கி வாங்கினான். கூடவே அரைக் கட்டி லைபாய் சோப்! 'சிவீர்னு' அதப் போட்டாத்தேன் குளிப்பு குளிச்சாப்புலெ இருக்கும்.

''மருதக்கிப் போன நாகு?''

''ஒண்ணும் ஆவலெ. மருத மீனாட்சி மில்லுலெ இப்ப ஆள் எடுக்கலையாம். சிலுக்குவார்பட்டியிலெ வேணா சேத்து வுடுறேன்னாங்க.''

''அங்க போயி...?''

''அதான் வந்துட்டேன்....''

வாழைத் தோட்டம் தாண்டி, தென்னந் தோப்புக்குள் நுழையவுமே ஆற்றின் இரைச்சல் கேட்கத் தொடங்கிற்று. சிறு வாய்க்காலைக் கடந்து, வாய்க்கால் கரை ஏறவும் வெள்ளிச் சிதறலாய் மதகில் தண்ணீர் கொட்டுவது தெரிந்தது! மதகுக்குக் கீழே பரந்து கிடக்கும் மணற்பரப்பு. கலர் கலராய் சேலை, சட்டை, ஜமுக்காளம் என்று வெளுத் துப் போட்டிருந்தனர். அதற்கு இடப்பக்கம் மாமர நிழல். சுற்றிலும் பசும்புல், கருவேலஞ் செடிகள். அங்குதான் உட்காரச் சௌகர்யம்.

''நாகு, நான் பஞ்சுவைக் கல்யாணம் பண்ணிக்கப்போறேன்.''

விசுக்கென்று திரும்பி, அவனைப் பார்த்தான். திகைக்கும் பார்வை!

''அவசரமா?''

''அவசரமில்லெ. அவசியமாயிடுச்சு.''

''பஞ்சு எதுவும் சொல்லுச்சா?''

**க**த்திரி வெயிலில் இருந்து சென்னை வாழ் மக்கள் ஜில்லுன்னு ரிலாக்ஸ் ஆக புரசைவாக்கம் அபிராமி மாலில் மெகா பனி உலகம் ஒன்றை ஏற்பாடு செய்திருக்கின்றனர். இதனைத் திறந்து வைத்து,தொண்டையில் வழுக்கிச் செல்லும் ஐஸ்கிரீமாக சல்லுன்னு விளையாடி ரசிகர்களை குஷிப்படுத்தினார் ஜெயம் ரவி.

இடி, மின்னலுடன் கூடிய 140 கி.மீ.



# சென்னையில் சுவிட்சர்லாந்த்!

**வேகம் கொண்ட பனிப்புயல், அனல் பிழம்பாக 50 அடி பனிச் சறுக்கு, பனிச் சிற்பங்கள், மானசரோவர் ஐஸ் லிங்கம், எஸ்கிமோக்களின் வீடு என மிகப் பிரமாண்டமான பனி உலகம் அபிராமியின் உள்ளே இருக்கிறது.**

**நன்கு சுத்திகரிக்கப்பட்ட தண்ணீரால் ஆன ஐம்பது டன் எடையுள்ள பனி எப்போதும் உறைந்த நிலையிலேயே உள்ளது.**

**வருடத்தின் 365 நாட்களும் இந்தப் பனி உலகத்தைக் கண்டுகளிக்கலாம். மைனஸ் 10 டிகிரி உள்ள இந்த சுவிட்சர்லாந்துக்கு 'லவ்'வுடன் ஒரு ரவுண்டு போய்வாருங்களேன்!**

**- ராஜசேகர்**

''என்னைக்குச் சொல்லுச்சு? அதுக்குப் பயம். அந்தப் பயத்துலெ சாவுது. அதப் போக்கணும்...''

''ஒங்க வீட்டுலெ...?''

''வீடா...? அதெல்லாம் நடக்குற காரியமா?''

''இன்னமும் ஊர் மாறலெ கோவிந்து.''

''நாம மாறுவோம். அது தானா மாறும்.''

அவன் முகத்தைப் பார்த்தான். அவன் தீவிரம் தெரிந்தது. தெளிவு புரிந்தது. ஆனாலும் ஏனோ கலக்கம்!

ஆசாரித் தெருவிலிருந்து. அந்த குறுக்குச் சந்து வரை கூட்டம்! நடுத் தெருவிலிருந்தும் மேலத் தெருவிலிருந்தும் ஜனங்கள், சிறுநடையும் பெரு நடையுமாக விரைந்து கொண்டிருந்தனர். கோவிந்தும், நாகுவும் குளித்து விட்டுத் திரும்பினர். தெருவில் நெல்லு காயப் போட்டுக் கொண்டிருந்த பெண்கள், கத்தரி வத்தல், சீனி அவரைக்கா வத்தல் என்று காயப் போட்டு, காக்கையை விரட்டிக் கொண்டிருக்கும் சிறுசுகள். கூடி இருந்த இளந்தாரிகள் எல்லாம் விரைந்து ஓடினார்கள். ஒரு கிழவி தெருவில் விழுந்து, கூக்குரலிட்டு அழுதாள். நண்டும் சிண்டும் அலறும் சப்தம்! அத்தனை கூச்சலுக்கும் இரைச்சலுக்கும் இடையே ஒரு நிசப்தம் விழுந்து கெடந்தது.

''என்னவாம்?''

''குட்டிபுள்ள நாண்டுகிட்டா...!''

''ம்... கொத்துக்காரே பொண்டாட்டி!''

''நாண்டுகிட்டாங்களா?''

''உன் தாப்பா, போட்டுக்கிட்டு 'சுருக்கு' போட்டுத் தொங்குறா!''

தூக்கிவாரிப் போட்டது!

''அடி பாதகத்தி மகளே! அடி பாதகத்தி மகளே!'' என்று பெண்கள் கூட்டம் குமுறிற்று! ''எம் புள்ள தலயிலெ இப்படித் தீயள்ளிப் போட்டுட்டுப் போயிட்டயடி சண்டாளி...'' என்று ஒரு வயசான கிழவி உடம்பை வெட்டி வெட்டி உதறிற்று. அவள் கொத்துக்காரனின் அம்மா. தலையை விரித்து, முழங்காலை நிமிர்த்தி சுவரில் சாய்ந்து உட்கார்ந்து இருந்தாள். அவளுக்கு முன்னாலும் பக்க வாட்டிலும் அந்தத் தெரு பொம்பளைகள். ஒரே அழுகையும் அரட்டலும்தான். குட்டிப் புள்ளயின் குழந்தைகள் அம்மாவைப் பார்த்துப் பார்த்துக் கதறின. தேம்பலும் திகைப்புமாய் அம்மாவின் பிரேதத்தைப் பார்த்தன. பார்ப்பவர்களின் நெஞ்சைப் பிழிந்தது அது!

கோவிந்துவும் நாகுவும் தெரு ஓரம்

சற்று எட்டினாற்போல் நின்றிருந்தனர்!

கோவிந்து எங்கோ பார்த்தான். தெருவே தெரியவில்லை. ஜனக்கூட்டம். அந்த வாழை மட்டும் ஒருக்களித்து நின்றிருப்பது தெரிந்தது. குட்டிப் புள்ள வைத்த வாழையாகத்தான் இருக்கும். வாழையை ஒட்டிய மண்ணையும் கொத்திக் கிளறி உயிராக்கி வைத்திருந்தாள். 'கொழுந்தனாரே... கொழுந்தனாரே' என்ற அவள் குழைவும், எப்போதும் எண்ணெய் போட்டுப் படிய வாரி, இழுத்து முடிந்த கொண்டை, பவுடர் பளபளப்பாகச் சிரிக்கும் முகம்! அத்தனையும்



இப்படி ஒரே 'சுருக்கிலா' அழிய வேண்டும்? அன்று அவளை - அவளை என்றால் அவளை மட்டுமல்ல, வடக்குத் தெரு வண்டிச் சுப்பையா மகனையும்... அந்த ஆற்றுப் பள்ளத்தில் கண்ட காட்சி! அதற்குப் பிறகு அந்த முகத்தைப் பார்க்கவே இல்லை. இனியும் பார்க்கப் போவதில்லை! யம்மாவ் யம்மாவ் என்று ஒன்று விழுந்து அரட்டுகிறது.நெஞ்சு வெடிப்பது போல கூவுகிறது. இதெல்லாம் விட்டு விட்டு எப்படித் 'தொங்க'த் தோன்றிற்றோ?

அப்படியே உடம்பெல்லாம் நடுங்கி விட்டது. ஒன்றும் பேச முடியவில்லை. ஒரு பெருமூச்சு விட்டு விட்டு நாகுவைப் பார்த்தான். கொத்துக்காரரை நான்கைந்து இளந்தாரிகள் எங்கிருந்தோ கைத்தாங்கலாகக் கூப்பிட்டு வந்தனர். தெருவையும் அந்தக் கூட்டத்தையும் பார்த்துவிட்டு ஒரு கதறு கதறினானே பாருங்கள். ஆத்மா போய்விட்டது. தெருவை அடைத்து நின்றிருந்ததும், உட்கார்ந்து இருந்ததும் அகல விலகி வழிவிட்டது. பாதிப் பிரமையும், பாதி சித்தமுமாகத்தான் கொத்துக்காரரைத் தூக்கிக் கொண்டு போனார்கள்.

''என்னதுனு காங்கட்டும்; ஏதுன்னு காங்கட்டும்.''

''வாய வெச்சுகிட்டுக் கெட.''

''எதுக்கு இப்படி வள்ளுனு வுழுவுற..?''

''ஒன் சோலியப் பாரு.''

***''என்னது? மாப்பிள்ளை இப்படி ஒல்லியா, கிழிஞ்ச நார் மாதிரி இருக்காரே?''***

***''கவலையேபடாதீங்க... உங்க பெண்ணை பூ மாதிரி பார்த்துக்குவார்.''***

***- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்***

''ஒனக்கு என்னவாம்டா...?''

அவன் ஒரு சாக்கடையில் கால் கட்டை விரலால் கிளறிக் கொண்டே, ''வெளிச்சமாயிடுறதுக்குள்ள வௌக்க அணைச்சுக்கிட்டா'' என்று முணங்கினான்.

''என்னடா சொல்றே?''

''அதான் தெரிஞ்சிருக்கே? இனிமே என்னத்த புதுசா கண்டுபிடிக்கப் போறது?''

''வெசாரிக்க வேணாமாக்கும்.''

''வடக்குத் தெருக்காரங்கிட்டத்தேன் போவணும்.''

கோவிந்து தொண்டை வரை நகர்ந்து விட்ட குமுறலை அடக்கிக் கொண்டான். மனத்தை சூன்யப்படுத்திக் கொண்டு வீட்டுக்கு நடந்தான்.

***(காற்று வீசும்)***

# பயமா இருக்காதா?




- ஜி.லட்சுமிபதி

அலை கடலும் ஓய்ந்திருக்க
அகக் கடல்தான் பொங்குவதேன்?
நிலமகளும் துயிலுகையில்
நெஞ்சகம் தான் பதைப்பது மேன்?

காட்டினில் வாழ் பறவைகளும்
கூடுகளைத் தேடினவே!
வேட்டுவரும் வில்லியரும்
வீடு நோக்கி ஏகுவரே!

வானகமும் நானிலமும்
மோனமதில் ஆழ்ந்திருக்க
மான் விழியாள் பெண்ணொருத்தி
மனதில் புயல் அடிப்பது மேன்?

வாரிதியும் அடங்கி நிற்க
மாருதமும் தவழ்ந்து வர



அமரர் கல்கி

காரிகையாள் உளந்தனிலே
காற்று சுழன் றடிப்பதுமேன்?

அலை கடல் கொந்தளிக்கையிலே
அகக் கடல்தான் களிப்பது மேன்?
நிலமகளும் துடிக்கையிலே
நெஞ்சகந் தான் துள்ளுவதேன்

இடி இடித்து எண் திசையும்
வெடி படும் இவ் வேளையிலே
நடனக் கலை வல்லவர்போல்
நாட்டியந்தான் ஆடுவதேன்.

(கல்கி பாடல்கள்
தொகுப்பிலிருந்து...)

# அலை கடல்



ஐஸ்க்ரீம் சாப்பிட ஆசைப்படாதவர்கள் யார்தான் இருக்கிறார்கள்? அதுவும் கோடை காலமென்றால் சொல்லவே வேண்டாம்.

அதுசரி... முதன்முதலில் ஐஸ்க்ரீமைக் கண்டுபிடித்தவர்கள் யாரென்று ஒரு நாளேனும் நீங்கள் யோசித்ததுண்டா?

நான்காம் நூற்றாண்டில் ரோம் நகரத்தில்தான் ஐஸ்க்ரீம் பிரபலமாகியிருக்கிறது. ரோமை ஆண்ட நீரோ மன்னன்தான் (நகரம் பற்றியெரிந்தபோது பிடில் வாசித்துக்கொண்டிருந்த அதே மன்னன்தான்), முதன்முதலில் மலையிலிருந்து பனிக்கட்டிகளை அள்ளிவரச்செய்து பழங்களை அதில் கலந்து ருசி பார்த்திருக்கிறான்.

ஆனாலும், ஏழாம் நூற்றாண்டில் சீனத்தை ஆட்சி செய்த டாங்க் என்ற மன்னனே பனிக்கட்டியோடு பாலைக் கலந்து பரிசோதித்துப் பார்த்தவன். இவன் காலத்தில் சீனாவிலிருந்துதான் ஐரோப்பிய நாடுகளுக்கு ஐஸ்க்ரீம் அனுப்பப்பட்டு வந்ததாம். அதன்பிறகு, இத்தாலி மற்றும் பிரான்ஸ் நாடுகளின் அரண்மனை விருந்துகளில் ஐஸ்க்ரீம் முக்கியமான ரெஸிபியாகிவிட்டது.

**www.inventors.about.com**

கல்கத்தா பிரிட்டிஷ் இந்தியாவின் தலைநகரமாக இருந்தபோது, அங்கு வேலை பார்த்துவந்த சார்லஸ் ப்ராட் கென்னடி என்ற அதிகாரி, வெயில் கொடுமை தாங்காமல் சிம்லா பக்கமாய் சுற்றித்திரிந்தார். மலையழகில், அதன் குளிர் இதத்தில் மனத்தைப் பறிகொடுத்த அவர்தான் 1822ம் ஆண்டு சிம்லாவில் முதல் கோடை இல்லத்தை நிர்மாணித்தவர். அடுத்த பத்தாண்டுகளில் கோடை இல்லங்களின் எண்ணிக்கை நூறைத் தாண்டிவிட்டது.

இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலான வில்லியம் பெண்டிங்கின் பார்வை சிம்லா மீது விழுந்தது. அதன்பின் அதற்கு ஏறுமுகம்தான். அவர்தான் சிம்லா என்று பெயரிட்டவர்.

வடக்கே இந்தக் கதையென்றால், தெற்கே தமிழகத்தில் அதிகாரியாயிருந்த ஜான் சுல்லீவன் உதகமண்டலத்திலிருந்த பழங்குடிகளிடமிருந்து கட்டாயமாக நிலத்தை ஆக்கிரமித்துக்கொண்டு ஊட்டி என்ற கோடைவாசஸ்தலத்தை உருவாக்கினார்.

**www.hill-stations-india.com**

லேடி ஜில் என்ற பெயரில் அமெரிக்காவில் ஒரு பெண் ஓவியர் இருக்கிறார். பெயரைப் போலவே அவரது ஓவியங்களும் ஜில் ரகம்தான். கலிபோர்னியாவில் பிறந்த லேடி ஜில், தனது சிறுவயதிலிருந்தே சியர்ரா நிவேடா மலையின் இயற்கைக் காட்சிகளை விதம்விதமாய் வரைந்துவருகிறார்.

ஜில்லின் கைவண்ணமே பெரும்பாலான அமெரிக்கச் கவர்களை அலங்கரித்துக் கொண்டிருக்கிறது.

**www.ladyjill.com**

• **ஸாந்த்** •

ப்ரெஞ்ச் முத்தத்திலிருந்து பறக்கும் முத்தம் வரைக்கும் பழகிப் பழகி பால் புளித்த கதையாகிவிட்டது. இப்போது பிரபலமாகிக்கொண்டிருப்பது எஸ்கிமோ முத்தம்.

நண்பர்கள், குழந்தைகள், உறவினர்கள் என்று யாரையும் எஸ்கிமோ ஸ்டைலில் முத்தமிடலாம் என்பதுதான் இதன் தனி 'இச்' சிறப்பு.

அன்புக்குரிய இருவர் ஒருவரோடு ஒருவர் முகம் நெருங்கி மூக்கு நுனிகளை உரசிக்கொள்வதே எஸ்கிமோ முத்தம். வேறெதுவும் கண்டிப்பாக இல்லை.

இந்த வகை முத்தத்தை முதலில்

ஆர்ட்டிக் பகுதியில் பார்த்ததால் அதுவே பெயராகியும்விட்டது.

நல்ல விஷயங்கள் எங்கிருந்தாலும் அதைப் பின்பற்றுவது நமது மரபல்லவா?

எஸ்கிமோ முத்தமும் உண்மையிலேயே நல்ல விஷயம்தான். இதமோடு இதழ் பொருத்தி முத்தமிடுகையில், வாயிலுள்ள சில நோய்க்கிருமிகள் எகிறிக் குதித்து மற்றொருவர் [illegible]யில் ஏறிவிட வாய்ப்புகள் அதிகம்.

எஸ்கிமோ முத்தத்தில் அதற்கு வாய்ப்பே இல்லை. அன்புக்கும் ஆரோக்கியத்துக்கும் ஒருசேர உத்தரவாதம்.

**www.eskimo.com**

# ஹெல்த்தியான எஸ்கிமோ முத்தம்!

கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

## உங்க மாவட்டத்துல 'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எது?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்கு?
- அசத்தலா போட்டுக்கிட்டு அதிரடி பண்ண சேலை.ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கே பெஸ்ட்டா கிடைக்கும்?
- உங்க மாவட்டத்தோட தலை போற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்ன்னு நினைக்கறீங்க?
- மிஸ்டர் மாவட்டம் யாருங்க! என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்கள் மாவட்டத்துக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்?

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம், படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).

## வர்றோம்...

- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- மாவட்டத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 15.06.09**

**கலக்க வருதுப்பா கல்கி**

**உதகை மாவட்டம்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

# திருட்டும் கொள்ளையும்

எங்கள் வீட்டிலே வேலை செய்கிற பணிப்பெண் ஒரு தப்பு செய்துவிட்டாள். என் மனைவி இன்னும் படித்து முடிக்காமல் வைத்திருந்த இரண்டு சமீப மங்கையர் மலர் இதழ்களை, வேலை முடிந்து திரும்பும்போது புடைவைத் தலைப்பில் மறைத்துக் கொண்டு புறப்பட்டாள். விஜயா சந்தேகப்பட்டு அவளைத் திரும்ப அழைத்து விசாரிக்க, விஷயம் அம்பலமாகி விட்டது.

மறுநாள் நான் விசாரித்தபோது, ''படிச்சுட்டுத் திரும்பத் தந்துடலாம்னுதான் எடுத்துப் போனேன்'' என்றாள் பணிப்பெண். ''என்ன புத்தகம்?'' என்று கேட்டேன். ''குமுதம்'' என்றாள்!

நான் சிரித்துவிட்டு, ''உனக்குப் படிக்கத் தெரியும்; படிக்கும் ஆர்வம் என்றால் உன் வீட்டில் ஏராளமான பத்திரிகைகளையும் புத்தகங்களையும் நானே அடுக்கி வைத்துவிட்டுத் திரும்புவேன். இப்படிச் செய்து விட்டாயே'' என்றேன். மன்னிப்புக் கேட்டாள். இந்த மாதிரி சின்னத் திருட்டுகளும் பெரிய கொள்ளைகளும் எங்கள் வீட்டில் மட்டுமின்றி கல்கி காரியாலயத்திலும் பலமுறை நடந்திருக்கிறது!

**"அஜாக்கிரதையாக சாவியை வைத்துவிட்டு, உன்னுடைய அசட்டுத்தனத்தினால் ஒரு பையனுக்கு ஆசைகாட்டி அவனைத் திருடனாக்கி விட்டாயே!"**

அன்றைய கல்கி காரியாலயத்தின் பின்புறம் பச்சையப்பன் கல்லூரியின் விஸ்தாரமான நிலப்பரப்பு உண்டு. மரங்களும் செடிகளும் புதர்களுமாக கேட்பாரற்றுக் கிடக்கும். கல்லூரி கட்டிடங்கள் உள்ள பகுதியில்தான் நடமாட்டம். கல்கி அச்சகத்தில் வாரா வாரம் பைண்டு செய்யப்படும் கல்கி இதழ்கள், சில நூறு எண்ணிக்கையில் காம்பவுண்டு சுவருக்கு மேலாகப் பயணமாகி பச்சையப்பன் கல்லூரி நிலப்பரப்பில் விழும்! அப்புறம், மாணவர் போல உட்புகுந்து, விழுந்து கிடக்கும் கல்கி இதழ்களைக் கட்டாக எடுத்துக் கொண்டு போய் விடுவார் ஒரு 'சாமர்த்தியசாலி'! ஏஜண்டுகளுக்கு அனுப்ப வேண்டிய பிரதிகளில் துண்டு விழும் மர்மத்தை விடுவிக்க முயன்றபோது, பல நாள் திருட்டு ஒருநாள் அம்பலமாயிற்று! அவருக்கு வேலையும் போய்விட்டது.

இன்னொரு நபர், என் உறவினர்தான். வறுமையில் குடும்பம் வாடியதால் சதாசிவம் அவர்களிடம் சொல்லி அவருக்கு ஒரு வேலை வாங்கிக் கொடுத்தேன். மனுஷன் கொஞ்ச நாளைக்கு நன்றியோடுதான் இருந்தார். அப்புறம், காலையில் பார்த்தால் ஒடிந்து விழுகிற மாதிரியும் மாலை வீடு திரும்பும்போது, தொப்பை விழுந்த மாதிரியும் தென்படலானார்! எனக்கு உறுத்தலாக இருந்தது. ஒருநாள் மாலை, காரியாலய கேட்டருகே கூர்க்கா அமர்வதற்கான குட்டி அறையில் அவரைப் பரிசோதிக்கப் போக,

7

## 70 முதல் 7 வரை - II

## கல்கி ராஜேந்திரன்

புத்தம் புதிய கல்கி இதழ்கள் பொலபொல வென்று உதிர்ந்தன! உறவு முறை கருதி சதாசிவம் கூட சற்று யோசித்தார். நான், ''தாட்சண்யமின்றி அனுப்பி விடுங்கள்'' என்று கூறிவிட்டேன். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, 'செக்யூரிட்டி' பலப்படுத்தப்பட்டது.

குற்றாலத்தில் அவ்வப்போது டி.கே.சி. அவர்களுடைய விருந்தோம்பலையும் இலக்கியப் பரிமாற்றத்தையும் அனுபவித்துக்கொண்டு கல்கி குடும்பம் தண்டு

ஒரு தந்தி வந்தது: ''வீட்டில் கொள்ளை போய் விட்டது; உடன் வரவும்!''

அம்மா பதறிப் போனாள். ''உடனே மெட்ராஸ் திரும்பணும்'' என்றாள். அப்பாவோ, ''கொள்ளை போனது போய் விட்டது. இனி நாம் போய் ஆவது என்ன?'' என்று கேட்டார். அவருக்கு



✱ சென்னை, கல்கி சதாசிவம் இல்லத்தில் ராஜாஜி, டி.கே.சி., 'கல்கி' சதாசிவம் குடும்பத்தினர்...

இறங்கிவிடும். அதிகபட்சமாக ஒரு சமயம் பதினைந்து நாட்கள் தங்க திட்டமிடப் பட்டது. சென்னையில் வீட்டைக் கவனித்துக் கொள்ள அப்பா இளைஞர்களான இரு உறவினர்களை ஏற்பாடு செய்திருந்தார். வீட்டோடு இருந்து, ஹோட்டலில் சாப்பிட்டுக் கொள்ள பணம் கொடுத்திருந்தார். குற்றாலம் போய் ஆறேழு நாட்களானதும்

இயற்கை எழிலையும் இலக்கியச் சுவையையும் திட்டமிட்ட நாட்களுக்கு அனுபவித்து விட ஆசை. அம்மா பிடிவாதமாக என்னையும் துணைக்கு இழுத்துக் கொண்டு, தென்காசியில் அன்றே ரயில் ஏறி சென்னை வந்து சேர்ந்தாள். (அந்நாட்களில் ரயிலில் இரண்டாம் வகுப்பு ரிசர்வேஷன் எளிதில் கிடைக்கும்.)

அலறிப் புடைத்துக்கொண்டு வந்தது தான் மிச்சம். கொள்ளை போன பொருட்கள் என்னென்ன என்று அம்மாவுடைய ஞாபகசக்தி பட்டியலிட்டதே தவிர, ஒன்றைக் கூட திரும்பப் பெற முடியவில்லை. சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு சிறைவாசத்தை நிறைய அனுபவித்திருந்த தாலோ என்னமோ அப்பாவுக்கு போலீஸில் புகார் கொடுப்பதும் பிடிக்காது. வீட்டுக்குக் காவலாக இருந்தவர்களைக் கூட அப்பா கண்டிக்கவில்லை. வாலிப வயதில் இரவில் அசந்து தூங்குவது இயல்புதான் என்று சொல்லிவிட்டார்!

**நா**ன் டீன்-ஏஜ் பருவத்தை எட்டிப் பார்த்த சமயம் அப்பா, வீட்டுச் செலவு, கொடுக்கல்-வாங்கல் பொறுப்பையெல்லாம் என் தலையில் கட்டி விட்டார். இதற்கு சிறு வயதிலிருந்தே எனக்குப் பயிற்சியும் தந்திருந்தார். இரண்டு ரூபாய் பாக்கெட் மணி தந்து கணக்கு வைத்துக் கொள்ளச் சொல்வார். மாதக் கடைசியில் கால் ரூபாய் மிச்சம் பிடித்திருந்தால் 'பேஷ்' என்பார். இப்படி ஆரம்பித்த கணக்குப் பிள்ளை வேலை, காந்தி மண்டபம், திரு.வி.க. மணிமண்டபம் எல்லாம் உருவான சமயம் நன்கொடைகள் வரவுக்கும் செலவுகளுக்கும் நான் கணக்கு வைத்துக் கொள்வது, வங்கிக் கணக்கு சரிபார்ப்பது என்ற அளவுக்கு வளர்ந்து விட்டது. அப்பா கொடுத்த இந்த ஆரம்பப் பயிற்சிதான் எனக்கு பின்னாட்களில் கல்கி காரியாலயத்தின் நிர்வாக இயக்குனர் பொறுப்பு ஏற்றபோதும் கைகொடுத்தது. பொருளாதாரக் கோட்பாடுகள், வியாபார நுணுக்கங்கள் எல்லாம் எவ்வளவோ இருக்கலாம். ஆனால் எல்லாவற்றுக்கும் அடிப்படை, 'வரவு-வசூல்; செலவு-சிக்கனம்' என்ற நாலு வார்த்தைகள்தாம் என்பதைப் புரிந்து கொண்டிருந்ததால் சமாளித்தேன். இன்றைக்கும் கூட செலவுக் கணக்கு பார்த்து பாக்கி பணம் பர்ஸில் சரியாக இருக்கிறதா என்பதை உறுதிசெய்து கொள்ளாவிட்டால், எனக்கு இரவில் தூக்கம் வராது!

**"திருடனைத் துரத்திண்டு ஓடினியா? எவ்வளவு தூரம் ஓடினே?" என்று கேட்டார். விவரித்தேன். "பேஷ்" என்று மறுபடியும் தட்டிக்கொடுத்தார்.**

**எ**னது மேல்நிலைப் பள்ளிப் பருவத்தில், என்னுடன் சேர்ந்து உறவுமுறையுள்ள ஒரு பையனையும் அப்பா படிக்க வைத்துக் கொண்டிருந்தார். வீட்டோடு தங்கியிருந்த அவனுக்கும் சேர்த்து நான் பள்ளிக் கூடச் சம்பளம் கட்டி விடுவேன். ஏறத்தாழ என் வயதுதான் அவனுக்கு. முதல் தேதியன்று அப்பா என்னிடம் குறிப்பிட்ட தொகை கொடுத்து, தம்முடைய பல்வேறு செலவுகளைக் கவனித்துக் கொள்ளச் சொல்வார். அவருக்கு அதற்கெல்லாம் நேரமிருக்காது. அப்பா கொடுக்கும் பணத்தை நான் மேஜை இழுப்பறையில் வைத்துப் பூட்டுவேன். ஒருநாள் கணக்குப் பார்த்தபோது பணம் குறைந்தது. அதே சமயம் அந்த உறவுமுறைப் பையன் தன் தகுதிக்கு அதிகமாக ஓட்டல்-சினிமா என்று செலவு செய்வதைக் கண்டுணர்ந்தேன். அப்பாவிடம் என் சந்தேகத்தை வெளியிட்டேன்.

''பணத்தைப் பூட்டிதானே வைத்திருந்தாய்?'' என்று கேட்டார் அப்பா.

''ஆமாம்; ஆனால் ஒருநாள் சாவியை மறந்து போய் மேஜை மேலேயே வைத்து

விட்டு குளிக்கப் போய்விட்டேன்'' என்றேன்.

'பளார்' என்று என் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது. ''மடையா! அஜாக்கிரதையாக சாவியை வைத்துவிட்டு, அப்புறம் பணம் குறைகிறது என்று வருத்தப்பட்டு என்ன பிரயோஜனம்? உன்னுடைய அசட்டுத்தனத்தினால் ஒரு பையனுக்கு ஆசை காட்டி அவனைத் திருடனாக்கி விட்டாயே!'' என்று சத்தம் போட்டார்.

தேள் கொட்டியது போலிருந்தது எனக்கு. உண்மைத் திருடனுக்கோ திட்டு கூட விழவில்லை! கடுமையான ஓர் எச்சரிக்கையுடன் அவன் தப்பி விட்டான்.



* விருந்தோம்பலும் இலக்கியப் பரிமாற்றமும்: டி.கே.சியுடன் 'கல்கி'

அந்த ஆண்டு, கலைமகள் தீபாவளி மலருக்கு கி.வா.ஜ. அவர்கள் 'கல்கி'யிடம் கதை கேட்டார். 'கல்கி' எழுதிய கதையின் தலைப்பு: ''திருடன் மகன் திருடன்!''

இந்த அனுபவத்துக்குப் பிறகு இன்று வரை நான் எப்போது அறையை விட்டு வெளியேறினாலும், 'பர்ஸ், கர்சீப், சாவிக் கொத்து' என்று பாக்கெட்டைத் தொட்டுப் பார்க்காமல் இருப்பதில்லை!

**க**ல்லூரிப் பருவத்தில் ஒருநாள் மாலை, வீடு திரும்ப மயிலாப்பூரில் பஸ் ஏறியபோது, கண்டக்டர் என் தோளில் குத்தி, ''பர்ஸை அடிச்சுக்கிட்டுப் போறான் பாரு'' என்று அவசரமாகச் சொன்னார். நான் 'சரே'லென்று பஸ் படியிலிருந்து குதித்து, ''டேய்! டேய்!'' என்று கத்தியபடியே பிக்பாக்கெட்டைப் பிடிக்க ஓடினேன். அவனோ சந்துபொந்துகளில் புகுந்து ஓடினான். நாலு திருப்பங்களில் பின் தொடர்ந்தேன். ஐந்தாவது சந்தில் மாயமாகி விட்டான். சோர்வுடன் ஏமாற்றமும் வருத்த, வீடுநோக்கி அடையாறு வரை நடந்தேன்.

''ஏன் இவ்வளவு லேட்?'' என்று கவலை எட்டிப் பார்த்த குரலில் கேட்டார் அப்பா. நடந்ததைச் சொல்லி, கல்லூரிச் சம்பளம் கட்டியது போக பாக்கி பணம் ஐம்பத்தெட்டு ரூபாய் பறிபோய் விட்டதைத் தெரிவித்தேன். சொல்லும்போதே அப்பாவின் கோபம் வெடிக்கக் காத்திருந்தேன்.

''பலே! பலே!'' என்றார் அப்பா. முதுகில் ஒரு ஷொட்டு வைத்தார். ''திருடனைத் துரத்திண்டு ஓடினியா? எவ்வளவு தூரம் ஓடினே?'' என்று கேட்டார். விவரித்தேன். ''பேஷ்'' என்று மறுபடியும் தட்டிக் கொடுத்தார்.

பணம் பறிபோனது பெரிதில்லை; அதைத் திரும்பப் பெற முடியாமல் நான் தோல்வி அடைந்ததும் பெரிய விஷயமில்லை; மனப்பூர்வமான என்னுடைய முயற்சி மட்டுமே முக்கியமானது என்பதைப் புரிந்துகொண்டேன்.

**(அடுத்த வாரம்: மேதைகள் சந்தித்தால்...?)**

“நான் ஆசையோடு வரைந்த ஓவியங்களை அப்பா பலமுறை கிழித்துப் போட்டிருக்கிறார் - படிப்பில் நாட்டம் போய்விடும் என்று. ஆயினும், நான் கண் விழித்துப் படிப்பதாக பாவனை செய்தபடி நள்ளிரவில் புத்தகத்துக்கு நடுவில் வைத்து வரைந்திருக்கிறேன்.

அம்மாவின் அழகிய கோலங்களும்





# மகிழ்ச்சியின் ரூபங்கள்





அவர் நோட்டுப் புத்தகத்தில் வரைந்த படங்களும்தான் எனது பாடத்திட்டம் பத்தோடு பதினொன்று அத்தோடு இவனொன்றுன்னு வாழ விரும்பலை. தனித்துவமான புகழின் அடையாளத் தோடு என்னை இந்தப் பூமியில் பதிவுசெய்யத்தான் வரைகிறேன். பால்பாயிண்ட் பேனாவில் வரைவது தான் எனது ஸ்பெஷாலிட்டி. மகிழ்ச்சியின் ரூபங்கள்தான் எனது கருப்பொருள். போட்டோகிராப் எனது தொழிலாக இருந்தாலும், கல்யாண ஜோடிகளை ஓவியமாக வரைந்து கொடுத்து அசத்துவதும் என் பரிசளிப்புப் பாணி'' என்கிறார் பாண்டிச்சேரியைச் சேர்ந்த ஓவியர் ஆர். கண்ணன்.

-- அமிர்தா



ஆர்.கண்ணன்

# பச்சை நிறக் கடலும்

என் கணவருடன் சமீபத்தில் நியூஸிலாந்து சென்றிருந்தேன். அங்கு எங்களுக்கு ஏற்பட்ட ஜில் அனுபவங்கள்!

சிங்கப்பூரிலிருந்து கிரைஸ்ட் சர்ச் (Christ Church) நகருக்கு சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் மூலம் வந்து இறங்கினோம்.

விமான நிலையத்திலிருந்து நகருக்குள் செல்லும் வழியில் சிறிது தூரத்திலேயே அண்டார்டிக் சென்டர் (Antarctic Centre) என்ற சுற்றுலா மையம் இருந்தது.

அங்கு சென்றுவிட்டு, பின்னர் ஹோட்டலுக்கு பஸ்ஸில் பிரயாணம் செய்கையில் கட்டணம் எங்கள் இருவருக்கும் 14 டாலர். எங்களிடம் 12 டாலர்தான் சில்லறையாக இருந்தது. அதைத் தவிர 100 டாலர் நோட்டு இருந்தது. டிரைவரிடம் 100 டாலருக்கு சில்லறை இல்லை. எங்களை இறங்கச் சொல்லவும் மனது இல்லை. உடனே கொஞ்சம் யோசித்துவிட்டு எங்களுக்கு சலுகை முறை டிக்கெட் (அதாவது 50 வயதுக்கு மேலான எங்கள் இருவருக்கும் சிறுவர்கள் டிக்கெட். ஒருவருக்கு 4 டாலர் விதம்) 8 டாலர் வாங்கிக் கொண்டு அமரச் செய்தார். 'சுற்றுலாப் பயணிகளுக்கு அவர்கள் அந்த அளவுக்கு உதவுகிறார்கள், அதற்கான அதிகாரமும் இருக்கிறது' என்பது வியப்பு!

நியூசிலாந்து நாட்டில் Dunedin என்ற ஒரு நகரத்துக்குச் சென்றிருந்தோம். உள்ளூர் சுற்றுலாப் பேருந்தில் பல இடங்களுக்குச் சென்றோம். அங்கு டிரைவர்தான் எல்லா வேலையும் செய்வார். டிக்கெட் செக்கிங்கும் அவரே. போர்ட்டரும் அவரே. எல்லோருடைய லக்கேஜ்களையும் ஏற்றி



# 'பலே' டிரைவர்களும்

இறக்குவார். கைடும் அவரே. ஓட்டிக் கொண்டே மைக்கில் அவ்வூரைப் பற்றிய முக்கியமான தகவல்களைச் சொல்லிக் கொண்டே வருவார்.

அந்த ஊர் ரயில் நிலையத்தையே ஒரு சுற்றுலா மையமாக அவர்கள் காண்பிக் கிறார்கள். அங்கு டிரைவர் எங்கள் சாமான் களை இறக்கியதோடு அல்லாமல், எங்களின் அடுத்த பயணம் ரயிலில் என்ப தால் ஸ்டேஷனுக்கு உள்ளே வந்து ரயிலில் பயணம் செய்ய அனுமதிச் சீட்டையும், சாமான்களின் ரசீதையும் அவரே வாங்கிக் கொடுத்து உதவினார்; டிப்ஸ் எதுவும் வாங்கிக் கொள்ளாமலே. எந்த வகையிலும் இது அவருடைய வேலை இல்லை. எங் களை ஸ்டேஷனில் இறக்கி விட்டு விட்டு அவர் சென்றிருக்கலாம். நாங்கள் அவருக்கு நன்றி சொன்னதற்கு அவர் சொன்ன பதில்: ''இதிலென்ன சிரமம் இருக்கிறது. நீங்கள் வெளிநாட்டவர், உங்களுக்கு வசதிகள் செய்து கொடுத்து உதவி செய்வதில்தான் எங்களுக்கு மகிழ்ச்சி.''

நம் ஊர் டிரைவர்களையும் இப்படி 'பலே' டிரைவர்களாகப் பார்க்கவேண்டும் என்ற அபிலாஷை (நிறைவேறா ஆசை!) எழுந்தது.

நியூஸிலாந்தின் மேற்குத் தொடரில், கடற்கரையில் Milford Sound என்று ஓர் இடம். அங்கு இரு மலைகளுக்கு நடுவில் கடல் 4-5 கிலோ மீட்டர் தூரம் உள்வாங்கி இருக்கிறது. அது ஒரு அழகான சுற்றுலா மையம். அதில் இரண்டு மணி நேரம் உல்லாசப் படகுச் சவாரி. படகில் செல்லும்



● ராதிகா சுந்தரராஜன் தம்பதி...

போது இருபக்கமும் மலைகள். நடுவில் பச்சை நிறத்தில் கடல் தண்ணீர். அங்கங்கே மலையிலிருந்து நீர்வீழ்ச்சி. சுற்றிலும் ஆளைத் தூக்கிச் செல்லும் காற்று. அந்த ரம்யமான சூழல் என் மனத்தைவிட்டு நீங்கவே இல்லை.

Milford Sound என்ற அந்த இடத்தில் வாழும் மக்களின் ஜனத்தொகை நூற்றைம்பதுதான் இருக்கும். அதில் பெரும்பாலோர் சுற்றுலா தொடர்பான பணிகளில்தான் இருக்கிறார்கள். இவ்வளவு சிறிய இடத்தில் சுற்றுலாப் பயணிகள் வசதிக்காக எட்டு பேர் செல்லக்கூடிய சிறிய விமானமும், ஹெலிகாப்டர்களும் இறங்க வசதியும் செய்திருக்கிறார்கள். சுற்றுலாவை வளர்க்க அவர்கள் எவ்வளவு ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள் என்பது புரிகிறது.

நம் நாட்டிலும் மேற்குத் தொடர்ச்சி மலைகள், மும்பை, கோவா, கார்வார், கேரளா போன்ற இடங்களில் நியூசிலாந்தை விட அழகான பல கடலோர, இயற்கை எழில் கொஞ்சும் இடங்கள் உள்ளன. நமது சுற்றுலா இடங்களுக்கும் இதுபோன்ற வசதிகளைச் செய்யலாமே! இதனால் நல்ல புகழும் சுற்றுலா வருமானமும் மக்களுக்கு உயர்ந்த வாழ்க்கைத்தரமும் கிடைக்குமே என்ற ஏக்கம் நியூஸிலாந்தைவிட்டு வெளியேறுகையில் மனத்தில் நின்றே போனது.

**- ராதிகா சுந்தரராஜன்**



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009



**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!**

**முதல் பரிசு – ரூ.10,000/-**

**இரண்டாம் பரிசு – ரூ.7,500/-**

**மூன்றாம் பரிசு – ரூ.5,000/-**

பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ.500 சன்மானம் பெறும்.

யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.

**விதிமுறைகள் :**

* கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
* சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதி மொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
* அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை; போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்று உறுதிமொழி தரவேண்டும்.
* படைப்பாளி முப்பத்தைந்து வயதுக் குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.
* முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
* தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
* போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.
* பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.
* முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
* 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2009' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ், 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032.**

* **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 15.**
* **போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.**

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

**- ஆசிரியர்**

குற்றால மலையின் சாரல் காற்று விந்தன் கோட்டையினைக் குளிரூட்டிக் கொண்டிருந்தது.

கார்த்திகை மாதம் ஐந்தாம் நாள். நேரம் நள்ளிரவைத் தாண்டிக் கொண்டிருந்தது.

பாண்டியன் பராக்கிரமன் தன் மாளிகையின் உப்பரிகையில் சிலையென நின்றிருந்தான். குளிரிலும் கூட அவனுக்கு உடல் வியர்த்திருந்தது.

அவனது பார்வை தூரத்தில் தெரிந்த செண்பகத் தோட்டத்தின் மீது நிலைகுத்தியிருந்தது.

நிலவை மறைத்துக் கொண்டு திரண்ட மேகத்தால் இருள்சூழத் தொடங்கியது. பராக்கிரமன் மனத்தை, களிப்பும் கவலையும் சேர்ந்த கலவை கவ்விக் கொண்டிருந்தது.

அவனது மனஓட்டத்தைப் புரிந்து கொண்டாற்போல அமைதியாக அங்கு வந்து நின்றாள் பாண்டியன் மாதேவி.

''அரசே! தங்களின் இந்த ஆழ்ந்த யோசனையை, சாதனையின் நிதானம் என்று எடுத்துக் கொள்வதா? வேதனையின் பிரதானம் எனக் கொள்வதா?'' என்றவளின் பக்கமாகத் திரும்பினான் பாண்டியன்.

பிளாக் அண்ட் வொயிட் கதைகள்-7

புன்னகைத்தவாறு நின்றிருந்தவள், அடுத்த கேள்வியைத் தொடுத்தாள்.

''இத்துணை நாள் நினைத்திருந்த எண்ணம்தான் இன்று ஈடேறத் துவங்கிவிட்டதே! இன்னும் ஏன் யோசனை?''

''உண்மைதான் தேவி. என் நெடுநாள் கனவின் முதல் படியை நிறைவேற்றி விட்டேன். ஈடற்ற தொரு சாதனைக்கு இன்று கால்கோள் இட்டாயிற்று. இனி என் எண்ணமெல்லாம் எப்பாடுபட்டாவது எண்ணியது யாவும் திண்ணமாய் நடக்க வேண்டும் என்பதில்தான் இருக்கும்!'' அவ்விதம் அவன் சொன்ன போது அவன் முகத்தில் தெரிந்த கவலைக்கோடுகள், அவளுக்குள் கேள்வியை எழுப்பின.

''வேந்தே! அவைக் களமாக இருந்தாலும்,



அது படைக்களமாக இருந் தாலும், பெயருக்குத் தகுந்தாற் போல பராக்கிரமம் காட்டுவது தானே தங்கள் இயல்பு. அப் படிப்பட்ட பராக்கிரமர் இப் போது கலக்கம் கொள்வது எனக்கு என்னவோ போல் இருக்கிறது!'' அவளது வார்த் தைகளில் வலி இருந்தது.

''முதன்முறையாக நான் இன்று பெருங்கவலையை உணர்கிறேன் தேவி. அண்டை நாட்டு அரசர்களும், பெருமக்கள் பலரும் தனித்தனி யாய் என்னிடத்தில் வெளியிட்ட சேதி என்ன தெரியுமா?'' ஒரு வினாவுடன் நிறுத்தியவனை விசனத்துடன் ஏறிட்டாள்.

''என் சக்திக்கு மீறிய பன்மடங்கு பணியினை நான் இன்று தொட்டிருப்பதாகவும், 'இதனைத் திறம்பட முடித்தால் வரலாறு வாழ்த்துப் பாடும்! இல்லையேல் வசைபாடும்!' எனத் தெரிவித்தனர். அவர்கள் நம் நலம் விரும்பிகள்! ஆகவே துணிந்து தம் உள்ளக் கருத்தை என்னிடம் முன்வைத்து விட்டனர். இனி என்னை வரலாறு வாழ்த்துமா வசை பாடுமா என்பது காலத்தின் கையில் இருக்கிறது.''

# பராக்கிரமம்

பராக்கிரமனுக்குள் கனத்ததாய் ஒரு போராட்டம் துவங்கியிருக்கிறது என்பதை அவள் உணர்ந்தாள்.

தூரத்தில் எங்கோ இடியோசை கேட்டது. வானம் கடும் மழையை இறக்கப் போகிறது என்பது புரிந்தது.

அரண்மனை ஆலோசனை மண்டபம் அதற்கே உரிய விவாத சலசலப்பில் விறுவிறுப்பாக இருந்தது.

''அமைச்சரே! மக்கள் வளமாக இருக்கையில் பிறகு ஏன் உள்நாட்டில் குழப்பங்களும், கலவரங் களும் தலைகாட்ட ஆரம்பித்துள்ளன?'' தலைமைப் புலவர் செந்தமிழ்க்கிழார் வினவினார்.

''புலவரே! நம் அண்டைநாட்டுப் பகையரசுகளும் சேரரும்தான் இக் குழப்பங்களை விளைவித்துக் கொண்டிருக்கின்றனர். இதன் மூலம் நாட்டுக்குள் ஊடுருவுவதும், நம் ரகசியங்களை அறிந்து கொள்வதும் ஏதுவானதாக இருக்கும். ஊடாக நம் ஒற்றுமையைச் சிதைப்பதும் அவர்களது நம்பிக்கையாக இருக்கும்!'' அமைச்சர் விளக்கினார்.

**கொற்றவன்**



கிறீர்?'' என்றார் செந்தமிழ்க்கிழார். அவரைத் தொடர்ந்து தளபதியும் ஒற்றர் தலைவரை நோக்கி வினா தொடுத்தார்.

''வெளிதேசத்துத் தகவல் இருக்கட்டும் உலகநாதரே! இங்கே உள்நாட்டில் நிகழ்ந்து கொண்டிருக்கும் உள்குத்துக்களுக்கு உம்மவரின் புலனாய்வு என்ன பதில் தருகிறது?''

''நாம் இங்கே கூடியது நேற்றைய தினம் மன்னர் கால்கோள் இட்ட ஆலயத்தைச் சீரும் சிறப்புமாகக் கட்டி முடித்திட

## ''ஏன் உள்நாட்டில் குழப்பங்களும், கலவரங்களும் தலைகாட்ட ஆரம்பித்துள்ளன?''

ஒற்றர் படைத்தலைவர் உலகநாதன் எழுந்தார்.

''வேந்தே! நான் இப்போது சொல்லப் போகும் வடநாட்டுத் தகவல்கள் புதிதாகவும் புதிராகவும் இருக்கலாம். ஆனால் அது இங்கே நடைபெறுவதற்கான காலம் வெகு தூரமில்லை!''

ஒற்றர் படைத்தலைவர் என்ன அதிர்ச்சி தரப் போகிறாரோ என்றவொரு எதிர்பார்ப்பு எல்லோரிடத்தும் எழுந்தது.

''வடமேற்கு திசையிலிருந்து வரும் அன்னிய அரசர்கள் புதுவித ஆயுதம் கொண்டு வருகிறார்களாம். விசித்திரமான அந்த ஆயுதம் நெருப்பைக் கக்குமாம். கோட்டையைத் தூள் தூளாக்குமாம். பெரும் படையைக் கூட அழித்து விட வல்லதாக இருக்கிறதாம். ஆனால் அவர்கள் நம் நாட்டை வந்தடைவதென்பது அவ்வளவு எளிதல்ல; என்றாலும், அவர்கள் இங்கே வராது தடுக்கும் முயற்சிகளில் நாம் இப்போதிருந்தே தயாராக வேண்டும்'' என்றார் ஒற்றர் தலைவர்.

அந்தத் தகவல் அங்குள்ளவர்களுக்குச் சற்றே அதிர்ச்சியாக இருந்தது.

''எப்போதோ நடக்கவிருப்பதைப் பற்றி இப்போதே சொல்லி ஏன் புளி கரைக்

வழிவகை காண்பதற்காகத்தான்!'' பாண்டிய நாட்டு கருவூலப் பொறுப்பாளர் தனஞ்செயர் விவாதத்தைத் தம் பக்கம் இழுத்து வந்தார். அவரை வழிமொழிந்தார் அமைச்சர்.

''ஆம்! நாம் இப்போது அதற்கான தீர்வு காண்பதுதான் முதல் வேலை!''

''அதிவிரைவில் கவின்மிகு சிலைகள் தயாராகி விடும்! தென்னாட்டின் தலை சிறந்த ஆலயங்களுள் ஒன்றாக நம் மன்னர் அடிகோலியிருக்கும் விசுவநாதர் ஆலயம் திகழும் என்பதில் எள்ளளவும் ஐயம் வேண்டாம்!'' தலைமைச் சிற்பி தம்பங்குக்கு விளக்கம் தந்தார்.

''இதுவரை சோழர் ஆலயங்கள்தாம் சிறந்து நிற்கின்றன. நம் பாண்டிய தேசத்து ஆலயமும் அதற்கு இணையான கலைக் கோயிலாகத் திகழ வேண்டும் சிற்பியாரே!'' என்றார் தளபதி.

''ஆம்! சோழர்களுக்கு சவால் விடும் அளவுக்கு அமைக்க சோணாடு சென்று அதன் நுட்பங்கள் பலவற்றை அறிந்து வைத்திருக்கிறேன். வெகுவிரைவில் அதனை மெய்ப்பிப்பேன்!'' என்றார் சிற்பி.

''தலைமைச் சிற்பியாருக்கு இருக்கும் அந்த நம்பிக்கை மகிழ்ச்சியூட்டுகிறது.

ஆனால் அவருக்கு ஈடுகொடுக்குமா நம் கருவூலம் என்பதுதான் இங்கே நம் முன்னே உள்ள கேள்வி. அதற்கு என்ன விடை?'' என்றார் தனஞ்செயர்.

அனைவரும் அமைதியாயினர்.

அதுவரை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த மன்னன் பராக்கிரமன் தன் மௌனம் கலைத்தான்.

''பலரும் நாம் நம் சக்திக்கு மீறிய செயலில் இறங்கி அகலக்கால் வைக் கிறோம் என்றனர். ஆனால் நான் அதனை மறுக்கிறேன்!''

''இந்தத் தென்புலியூருக்கு பெருமை சேர்க்க வேண்டுமென்று மன்னன் என்ற வகையில் மட்டும் நான் இந்த அரும் பெரும் பணியினை முன்னெடுக்க வில்லை. இம்மண்ணின் ஒரு சாமானியக் குடிமகன் வரிசையில் கடைசி ஆளாக நின்றுதான் இதனைத் துவக்கியுள்ளேன். அப்படியிருக்க, இவ்வாலயத்தை நிறைவு செய்யும் பொறுப்பு இம்மண்ணின் ஒவ் வொரு அசல் வித்துக்கும் இருக்கிறது. அதனை முறைப்படுத்துவது மட்டுமே நம் வேலை. இதைத்தான் நான் இங்கே தெளிவுபடுத்த விரும்புகிறேன்!''

பராக்கிரமன் சொல்லி முடித்தபோது அனைவரும் அவன் வார்த்தைகளை ஆழ மாக உள்வாங்கி, உண்மையினை உணர்ந் திருந்தனர்.

அந்தக் கருத்தை தென்புலியூரின் ஒவ் வொரு குடிமகனுக்கும் கொண்டு போய்ச் சேர்ப்பதும், ஆலய அறப்பணிக்குழு ஒன்று அமைப்பதும் என முடிவெடுத்து அதன் படி நடக்க வேண்டும் என அந்த மந்திரா லோசனை நிறைவுற்றது.

**ஆ**ண்டுகள் பல அடுத்தடுத்து உருண் டோடின. அழகழகு சிற்பங்களுடன் கண்ட வர் வியக்கும் அற்புதமென அவ்வாலயம் விரைந்தெழுந்து விறைத்து நின்றது.

ஆயினும்...

ஆலயத்தைப் பறைசாற்றும் கோபு ரத்தை முழுதாய் முடித்திட முடியாமல் முடங்கிக் கிடந்தான் பாண்டியன்.

இடையில் ஏற்பட்ட இன்னல்களும், போர்க்களங்களும், தன் மகளின் தீராத நோயும், வெகு சொற்பமான கருவூலக் கையிருப்பும்... என தொடர் கலங்கடிப்புக் களில் பராக்கிரமன் உடலும் மனமும் பலமிழந்து போனான்.

**வி**ந்தன் கோட்டைக்குள் தன் மரணப் படுக்கையில் கிடந்தவாறே தான் கட்டிய கலைக் கோயிலை வெறித்துக் கொண்டிருந்





**ஜில் ஜில் கூல் கூல் குளியல்
ஆரம்பிச்சாச்சு. ஷாம்பூ
போட்டு அலசற வரைக்கும்
தண்ணீர் வரணும் கடவுளே!**

**- கார்த்திகா**

தான்.

எப்போது எழுந்து நிற்கும் இராஜ கோபுரம் என அவனுக்குக் கேள்வி எழுப்புவதாகத் தெரிந்தது அவ்வாலயம்.

''அமைச்சரே...! ஒரு ஓலை எடுத்துத் தாருங்கள்!'' பராக்கிரமன் குரலில் பெருங் கவலை ஊடாடியது.

அவனருகே அரண்மனை வைத்தியரும், தலைமைச் சிற்பியும், உட்பட பிரதான அரசியல் ஆளுமைகள் நின்றிருந்தனர்.

பராக்கிரமனிடத்தில் ஓலையும் எழுத்தாணியும் வழங்கப்பட்டன. அவன் மெல்லப் பேசினான்.

''ஆண்டாண்டு காலம் ஆண்டவர் ஆண்டபின் மாண்டு போகலாம். அதனிற் சிலரே ஆண்டவன் திருப்பணி மேவலாம். நானும் அச்சிலரில் ஓர் சிற்றிடம் கொண்டிருக்கிறேன் என்ற நிறைவு இருந்தாலும்...''



"என் முழு திறமையையும் காட்டி இந்தப் படத்துல நடிச்சிருக்கேன்."

"அடடா... அப்போ அடுத்த படத்துக்கு என்ன பண்ணப்போறீங்க?"

- சென்னிமலை சி.பி.செந்தில்குமார்

என்றவன் குரல் உடைந்தது. நா தழுதழுத்தது. வார்த்தை வராமல் தவித்தான். அவனது பார்வை மீண்டும் அந்த ஆலயத்தின் மீது நிலைகுத்தியது.

மன்னனின் மனத்தைப் பிசையும் பெருங்கவலையை அங்கிருந்தோர் உணர்ந்து கண்கள் கலங்கினர்.

பராக்கிரமன் விரல்கள் நடுநடுங்க அந்த ஓலையில் எழுத்தாணி கொண்டு எழுத்துக்களைக் கீறினான்.

''ஆராயினுமிந்த தென்காசி மேவும் பொன்னாலயத்து வாராததோர் குற்றம் வந்தால் அப்போதங்கு வந்து அதனை நேராகவே ஒழித்துப் புரப்பார்களை நீதியுடன் பாரோர் அறியப் பணிந்தேன் பராக்கிரமப் பாண்டியனே!'' என்று தான் எழுதியதை தலைமைச் சிற்பியிடம் நீட்டினான்.

''பெருந்தச்சரே! இதனைக் கல்வெட்டாக்குங்கள்! அத்துடன் என் சிற்பத்தையும் வடித்து ஆலயவாயிலின் தரையினில் பதியுங்கள். இவ்வாலயத்துக்கு நற்பணி செய்யும் அடியாரின் பாதங்களை என் சிரம் மீது சுமக்க சித்தமாயிருக்கிறேன். அவர்களுக்காகக் காத்திருக்கிறேன் என அறிவியுங்கள்!'' நடுங்கும் தன் கரங்களைக் கூப்பியவாறு கண்களில் கண்ணீர் தாரையிட பராக்கிரமன் சொன்ன போது, அங்கு நின்றவர் நெஞ்சம் சோகத்தில் விம்மியது.

பராக்கிரமன் காலமானான்.

அவனுக்குப் பின் வந்தவர்கள் அவன் எண்ணத்தை ஈடேற்றி விட்டனர்.

ஆனால்...

இப்போதும் தென்காசி ஆலயத்தினுள் நுழையும் அடியவர்களை தன் சிரம் மீது தாங்கிக் கொள்ள தரையினில் சிற்பமாக இருக்கிறான் பராக்கிரமப் பாண்டியன்!

தான் அரைகுறையாக விட்டுச் சென்ற பணிக்காக, ஆற்றொணாத சோகத்துடன் காலங்காலமாக சிலையாய்க் காத்திருக்கிறான்! ●

இரண்டாவதும் பெண் குழந்தை என்று தெரிந்தபோது, 'உனக்கு வேண்டியது நானா இல்லை உன் பெண் குழந்தையா என்பதை நீயே முடிவு செய்துகொள்' என்று நெருப்பு வார்த்தைகளை வீசினார் கணவர். அந்தத் தாயின் சாய்ஸ் பெண் குழந்தை. தனி மனுஷியாக தம்முடைய இரண்டு பெண் குழந்தைகளையும் வளர்த்து ஆளாக்கினார். அந்த இரண்டாவது பெண் குழந்தையான பூஜா, இந்த வருடத்து 'மிஸ் இந்தியா'. அவரது தாய் நீரா சோப்ரா...



# "சாதிக்கப் பிறந்தவள்!"

''திருமணம் என்பது எல்லோர் வாழ்க்கையிலும் வசந்த காலம். ஆனால் என்னைப் பொறுத்த வரை ஆரம்பம் முதலே அது ஒரு இலையுதிர் காலம்தான். முதல் குழந்தையைக் கருவுற்றபோது, 'ராஜா மாதிரி ஒரு பையன் பிறக்கப் போகிறான்; உன் வாழ்க்கையில் புது அத்தியாயம் ஆரம்பிக்கப் போகிறது' என்று சொன்னார்கள். பெண்ணாகப் பிறந்தபோது, நிலைமை இன்னும் மோசமானது.

என் மாமியார் ஒரு கேன்சர் நோயாளி. குளிப்பாட்டி விடுவது, சாப்பாடு கொடுப்பது என்று அவருக்கு எல்லாப் பணிவிடைகளையும் செய்து அக்கறையோடு கவனித்துக் கொள்வேன். மனம் குளிர்ந்த அவரது மனப்பூர்வமான ஆசிகள் என்னை என் கஷ்டங்களிலிருந்து மீட்கும் என்ற நம்பிக்கை. கணவரின் உடல்ரீதியான சித்ரவதைகளையும் நான் தாங்கிக் கொண்டேன்.

இதற்கிடையில் மீண்டும் கருவுற்றேன். எட்டு மாதக் குழந்தையை வயிற்றில் சுமந்து கொண்டிருந்த சமயம், திடீரென ஒருநாள் வேறு ஒரு பெண்ணை வீட்டுக்கு அழைத்துவந்த என் கணவர், 'இனிமேல் இவள்தான் என் மனைவி; விரைவில்

எங்கள் கல்யாணம்' என்று ஆர்.டி.எக்ஸ். குண்டைத் தூக்கிப் போட்டார்.

அந்தச் சமயத்தில் கூட, 'ஒருவேளை வயிற்றில் இருப்பது ஒரு ஆண் குழந்தை யானால், என் கஷ்டங்களுக்கெல்லாம் விடிவுகாலம் பிறந்துவிடுமே!' என்ற நம் பிக்கை இருந்தது. மீண்டும் பெண் குழந்தை. மூன்று நாட்களுக்கு ஆஸ்பத்திரி யில் என்னை யாரும் வந்து பார்க்க வில்லை. எதிர்ப்படுக்கையில் இருந்த ராணுவ அதிகாரியின் மனைவி ஒருவர், தம் குழந்தைக்கு வைத்திருந்த சில உடை களைக் கொடுத்தார். ஆஸ்பத்திரி யிலிருந்து டிஸ்சார்ஜ் ஆகி வந்தபோது, வீட்டை நரகமாக உணர்ந்தேன்.



★ சகோதரி, தாயுடன் பூஜா...

பூஜா ஒரு மாதக் குழந்தையாக இருந்த போது, கணவரைப் பிரிந்து இனி என் வாழ்க்கையை நானே கவனித்துக் கொள் வது என்று வேலைக்குச் செல்ல ஆரம் பித்தேன்.

'எங்களுக்காகத்தானேம்மா நீ இவ் வளவு கஷ்டப்படறே' என்று குழந்தைகள் கண்ணீர் விடுவார்கள்.

வளர்ந்த பிறகு, ஸ்கூல், காலேஜ் படிக்கும்போது கூட மற்ற மாணவிகளைப் பார்த்து, அவர்களைப் போல காஸ்ட்லியான உடை கள், காலணிகள் வாங்கிக் கொடு என்று கேட்டதில்லை. இரண்டு பஸ் ஸ்டாப் நடந்து சென்று பஸ் ஏறினால் சார்ஜ் குறை யுமே என்று நடந்து போய் பஸ் பிடிப் பார்கள் இருவரும்.

வீட்டிலும் சரி, கோயிலுக்குப் போனா லும் சரி, என் பிரார்த்தனை, 'ஆண்டவனே! என் கர்மாவுக்காக எனக்கு என்ன தண் டனை வேண்டுமானாலும் கொடு! தயவு செய்து என் செல்லங்களை ஒன்றும் செய் யாதே!' என்பதுதான்.

ஆண்டவனுக்கும் எங்கள் குடும்பத்தின் மீது கொஞ்சம் கருணை வந்தது. எனக்கு

**மிஸ் இந்தியா கிரீடம் சூட்டப்பட்ட போது...?**

"மிஸ் இந்தியா ஆவது என் கனவாக இருந்தாலும் கூட நிஜத்தில் நான் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டு, கிரீடம் சூட்டப் பட்டபோது, என்னால் நம்ப முடியவில்லை."

**ரோல் மாடல்?**

''எனக்கு ரோல் மாடல் என்று யாரு மில்லை; எனக்கு இன்ஸ்பிரேஷன் எப் போதுமே என் அம்மாதான்.''

**உங்கள் பலம்?**

''அம்மாதான்!''

**பலவீனம்?**

''சட்டென்று கோபம் வந்து விடும். மிஸ். இந்தியா டைட்டில் வென்ற பிறகு என் பாட்டி, 'இதை அணிந்துகொள்; உன் கோபத் தைத் தணிக்கும்' என்று

**பூஜா புத்திசாலிப் பெண். தைரியசாலி. அழகுடைய தன்னம்பிக்கை அசாத்தியமானது.**

சொல்லி, ஒரு பவழ மோதிரம் வாங்கிக் கொடுத்திருக்கிறார்.''

**சினிமாவில் நடிப்பீர்களா?**

''நான் எப்போதுமே குறுகிய கால இலக்குகளை நிர்ணயித்துக் கொண்டு அதை அடைந்த பிறகு, அடுத்தது என்ன என யோசிப்பவள். இப்போதைக்கு என் இலக்கு டிசம்பர் முதல் வாரத்தில் நடக்கவிருக்கும் உலக அழகிப் போட்டியில் ஜெயிப்பதுதான்.''

**ரொம்ப புத்திசாலி என்று அம்மா சொன்னாரே?**

''படிப்பைப் பற்றி மட்டும்தான் சொன்னாங்களா? படிக்கிற காலத்துல அடிச்ச லூட்டியைப் பத்தி சொல்லலையா? ஹோம் வொர்க் பண்ணலைன்னு எங்களைத் தண்டிச்ச டீச்சரை டாய்லெட்ல வெச்சு தாழ்ப்பாள் போட்டிருக்கோம்; வண்டி டயரை பஞ்சர் பண்ணி இருக்கோம்; இப்படி நிறைய.''

**அழகு ரகசியம்?**

''என் அழகு என் அம்மா எனக்குக் கொடுத்த சொத்து.''

- மௌலி



# எல்லாமே என் அம்மாதான்

ஆறாயிரம் ரூபாய் சம்பளத்தில் கோவாவில் ஒரு வேலை கிடைத்தது.

கோவா சென்று அங்கு நான்கு வருடங்கள் வேலை செய்தேன். அப்போது சேமித்ததை வைத்து பூனாவில் ஒரு ரூம் மட்டுமே கொண்ட ஒரு சிறிய வீட்டை வாங்கினேன். கோவாவில் வேலை பார்த்தபோது, தினமும் 16 மணி நேரம் வேலை செய்வேன்; சனி, ஞாயிறுகளில் கூட வேலைக்குச் சென்று, லீவைச் சேர்த்து வைத்து, வருடத்துக்கு நாலைந்து முறை பூனா சென்று வருவேன்.

அதன் பிறகு, பூனாவிலேயே ஒரு வேலையைத் தேடிக்கொண்டு என் குடும்பத்துடன், சொந்த வீட்டில் வசிக்க ஆரம்பித்தேன். பெரிய பெண் சுப்ரா திருமணமாகி, நல்லவிதமாக வாழ்க்கையில் செட்டில் ஆகிவிட்டாள். அவளுக்கு ஒரு அழகான பெண் குழந்தை இருக்கிறது. பூஜா, கல்லூரியில் படித்த நாட்களில் தன் செலவுக்கு அம்மாவிடம் தொந்தரவு செய்யக் கூடாது என்று மாடலிங் செய்து சம்பாதித்தாள்.

பூஜா புத்திசாலிப் பெண். தைரியசாலி. அவளுடைய தன்னம்பிக்கை அசாத்தியமானது. அவளை அவ்வப்போது உற்சாகமூட்டிக் கொண்டிருந்தாலே போதும்; சாதிக்கப் பிறந்தவள் சாதித்து விடுவாள். மிஸ். இந்தியா போட்டியில் அவள் வென்றதற்கு அவளுடைய கடினமான உழைப்பு, தன்னம்பிக்கை, புத்திசாலித்தனம், இறைவனின் அருள் எல்லாமே காரணம். அவளோ என் மீது கொண்ட ஆழமான அன்பு காரணமாக, தன் வெற்றிக்கு நான்தான் காரணம் என்று சொல்கிறாள். உலக அழகிப் போட்டியில் பூஜா நிச்சயம் வெற்றிபெறுவாள்'' நெகிழ்வுடன் சொன்னார் நீரா சோப்ரா.

குறும்படம்



# கண்ணீர்

'வாழ்க்கை என்றால் என்ன?' இப்படி ஒரு கேள்வியைக் கேட்டால், யாராலும் தெளிவான பதில் சொல்ல முடியாது. ஒவ்வொருவரும் அதன் பின்னால், அது இழுக்கிற இழுப்புக்கெல்லாம் வளைந்துகொடுத்தபடி ஓடிக்கொண்டே இருக்கிறார்கள். துயரங்களையும், ஏமாற்றங்களையும் அவ்வப்போது கிடைக்கிற சிறு சிறு சந்தோஷங்களையும் எதிர்கொண்டபடி; அவ்வளவுதான். இந்த நுட்பமான விஷயத்தை 'கண்ணீர் மழையில்...' என்கிற குறும்படமாக எடுத்திருக்கிறார் சுரேஷ்.

சிக்கலில்லாத மிக எளிமையான கதை. சரவணன் சினிமாவில் உதவி இயக்குநர். தினமும் வாய்ப்புப் பெறுவதற்காக ஒவ்வொரு தயாரிப்பாளராகத் தேடி அலையும் எண்ணற்ற இளைஞர்களில் அவனும் ஒருவன். ஒரு நாள் அதிகாலையில் எழுந்திருக்கிறான். பெட்டியில் இருந்து அன்றைக்குச் சொல்லவேண்டிய ஸ்கிரிப்டைத் தேடி எடுக்கும்போது, அவனும் அம்மாவும் சேர்ந்து எடுத்துக்கொண்ட புகைப்படம் கையில் கிடைக்கிறது. அதைப் பார்த்ததும் கிராமத்தில் இருக்கும் அம்மாவின் நினைவு வருகிறது. கூடவே அம்மாவுக்கு நல்ல பிள்ளையாக நடந்துகொள்ள முடியவில்லையே என்கிற குற்ற உணர்வும் எழுகிறது. அப்படியே உட்கார்ந்து, தன்னை மறந்து உறங்கிப் போகிறான் சரவணன்.

**ஒவ்வொருவரும் வாழ்க்கையின் பின்னால் அது இழுக்கிற இழுப்புக்கெல்லாம் வளைந்து கொடுத்தபடி ஓடிக்கொண்டே இருக்கிறார்கள்**

நண்பன் வந்து எழுப்ப, கிளம்புகிறான். அவன் வழக்கமாகச் சாப்பிடும் சிறிய உணவகத்தில் அவனுடைய நண்பர்களிடம் பழைய பாக்கியைக் கேட்டுத் திட்டுகிறார் கடைக்காரர். அதை வெளியில் இருந்து பார்க்கிறான் சரவணன். அவனுக்கும் அந்தக் கடையில் பாக்கி இருக்கிறது. சாப்பிடாமல் குடத்திலிருந்து வெறும் தண்ணீரை மட்டும் எடுத்துக் குடித்துவிட்டு நகர்கிறான். அதே சமயம், ஊரிலிருந்து அவனைத் தேடி சென்னைக்கு வருகிறாள் அவன் அம்மா.

சரவணன் ஒரு தயாரிப்பாளரைத் தேடிப் போகிறான். பல தடைகளைத் தாண்டி அவரைச் சந்தித்து, ஒரு படத்துக்காக அவன் தயாரித்து வைத்திருக்கும் கதையைச் சொல்கிறான். அம்மாவுக்கும் மகனுக்கும் இடையிலான உறவைப் பற்றிய கதை. தயாரிப்பாளருக்கு அந்தக் கதை பிடிக்கவில்லை. வேறு கதையோடு வரும்படி சொல்கிறார். சோர்ந்து போய் வெளியே வருகிறான்.

சரவணனைத் தேடி, சென்னை நகர வீதிகளில் நடந்து வரும் அம்மா ஓர் இடத்தில் மயங்கி விழுகிறாள். தலை

# மழையில்...

தொங்கிப் போய், நாடித் துடிப்பு அடங்கிவிடுகிறது. பக்கத்தில் மணலில் அம்மா கொண்டு வந்த பை பிரிந்து விழுகிறது. அதிலிருந்து அவள் சரவணனுக்காகக் கொண்டு வந்திருந்த முறுக்கு, அதிரசம், சில்லறைக்காசுகள் வெளியே சிதறிக் கிடக்கின்றன. யாரோ ஆம்புலன்ஸுக்கு ஃபோன் செய்கிறார்கள். அவளை ஒரு பெஞ்சில் படுக்க வைத்து, முகம் தெரியாதபடி துணியால் மூடுகிறார்கள். இரண்டு போலீஸார் காவலுக்கு நிற்க, சுற்றி வேடிக்கை பார்க்கிறார்கள் சிலர்.

அந்தப் பக்கமாக வருகிறான் சரவணன். எதிரே நிற்கும் கூட்டத்தைப் பார்க்கிறான். யாரோ அனாதைப் பிணம் என்று நினைத்துவிட்டு நகர்கிறான். அவன் காலில் ஏதோ தட்டுப்பட குனிந்து எடுக்கிறான். ஐந்து ரூபாய் சில்லறை நாணயம். அவன் அம்மாவின் பையில் இருந்து விழுந்த நாணயம். அதைக் கொண்டுபோய் டீக்கடையில் கொடுத்து, டீ ஆர்டர் செய்கிறான். அதற்குள் ஆம்புலன்ஸ் வந்து அம்மாவின் உடலை எடுத்துக்கொண்டு போகிறது. அதை வேடிக்கை பார்க்கிறான் சரவணன்.

சினிமாத்தனமான கதைதான் என்றாலும், நகரில் கனவுகளோடும் கதைகளோடும் வலம் வரும் எத்தனையோ இளம் இயக்குநர்களைக் கண்முன் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறார் குறும்படத்தின் இயக்குநர் சுரேஷ்.

கள்ளக்குறிச்சியைச் சேர்ந்தவர் சுரேஷ். அப்பா நடராஜன் சென்னையில் ஒரு பெயிண்ட் கடை வைத்திருக்கிறார். அவர் வாங்கிக் கொடுத்த ஒரு 'ஹேண்டிகேம்' கேமரா தான் குறும்படம் எடுக்க உந்துதலாக இருந்தது என்கிறார் சுரேஷ். தற்போது சினிமாவில் உதவி இயக்குநராகப் பணியாற்றும் ஆசையுடன் பல இயக்குநர்களின் அலுவலகங்களுக்குப் படை எடுத்துக்கொண்டிருக்கிறார்.


* சுரேஷ்

இந்தக் குறும்படத்துக்கு ஒளிப்பதிவும், மென்மையான இசையும் கூடுதல் பலம். அம்மாவாக நடித்திருக்கும் அஞ்சலையும் சரவணனாக நடித்திருக்கும் குமாரும் தங்கள் பங்கைக் கச்சிதமாகச் செய்திருக்கிறார்கள்.

ஆபாசக் கலப்பில்லாத, ஆரோக்கியமான கதையைத் தருவதற்கு, குறும்பட வடிவம் மிகச் சிறந்த களம் என்பதை மறுபடியும் நிரூபித்திருக்கிறது 'கண்ணீர் மழையில்...' குறும்படம். இப்படி ஒரு நல்ல குறும்படத்தை எடுத்திருக்கும் சுரேஷுக்கு, சினிமாவில் எந்த முன் அனுபவமும் இல்லை என்பதுதான் நம்மை மலைக்க வைக்கும் உண்மை!

**- பாலு சத்யா**

"இந்த வைகுண்ட பண்டரியில் வசிக்கிறான் ஸ்ரீஹரியான பாண்டுரங்கன். அவனைக் கண்ணாரக் கண்டேன். பாண்டுரங்கனின் பாதங்களில் தலையை வைத்து நமஸ்கரிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததே. அவன் என் மனமெங்கும் வாசம் செய்கிறான்'' என்று பின்னர் ஓர் அபங்கத்தில் குறிப்பிடும் அளவுக்கு நரஹரியின் மனம் மாறியது.

நரஹரி வழிபட்ட மல்லிகார்ஜுனர் ஆலயம், சந்திரபாகா நதித்துறையிலிருந்து விட்டலன் ஆலயத்துக்குச் செல்லும் வழியில் வலப்புறமாக அமைந்துள்ளது. சுற்றுவதற்குப் பிராகாரம் கூட இல்லாத அளவு மிகச் சிறிய ஆலயம். அந்த ஆலயத்துக்குள் நுழைந்தவுடனேயே அதன் தொன்மை மனத்தில் பதிந்து பக்தி ஏற்படுகிறது.

மல்லிகார்ஜுனரைத் தரிசிக்க சற்று கீழ் இறங்கிச் செல்ல வேண்டும். லிங்க வடிவில் அமைந்த மல்லிகார்ஜுனரை வட இந்திய வழக்கப்படி கருவறைக்குள் நுழைந்து தொட்டு நமஸ்கரிக்கலாம். சன்னிதிக்கு எதிரே கம்பீரமான நந்தி.

மல்லிகார்ஜுன தரிசனத்தைத் தொடர்ந்து விட்டல ஆலயத்தின் முக்கிய வாயிலை (பாண்டுரங்கரின் ஆலயத்துக்கு மொத்தம் ஆறு வாயில்கள்) அடைந்த போது, முந்தின இரவில் நம் கண்களில் தட்டுப்படாத இரண்டு உருவங்கள் புலப்பட்டன. அவை நாமதேவர், சோக்கா மேளர். பாண்டுரங்கனின் பக்த விஜயத்தின் இரு முக்கியச் செல்வங்கள்.

விட்டல ஆலய முக்கிய வாயிலின் முதல் நான்கு படிகள் நாமதேவரின் பெயரால் அழைக்கப்படுகின்றன.

பாண்டுரங்கன் கோயிலை விரிவுபடுத்தியதில் நாமதேவருக்கு முக்கியப் பங்கு உண்டு. இரண்டாயிரத்துக்கும் அதிகமான அபங்கங்களை எழுதியவர் நாமதேவர். அபங்கங்களை முதலில் உருவாக்கிய பெருமை கூட நாமதேவருக்குத்தான். ஞானேஸ்வருடன் இணைந்து இந்தியா முழுவதும் பக்தி மார்க்கத்தையும் பாண்டுரங்கன் மகிமையையும் பரப்பியவர் இவர்.



அருண் சரண்யா

# நான்கு படிகள்

சொல்லப்போனால் பாரதம் முழுவதும் பக்தியைப் பரப்ப வேண்டுமென்பது நாமதேவர் பிறப்பதற்கு முன்பே அவருக்கு இறைவன் இட்ட கட்டளை எனலாம். அந்தப் பின்னணியைப் பார்ப்போமா?

பகவத்கீதை குறித்து அறிந்திருப்பீர்கள். உத்தவ கீதை தெரியுமா?

**உ**த்தவர் ஒரு பெரும் ஞானி. கண்ணனிடம் நேரடியாகப் பேசும் பேறு பெற்றவர்.

''மஹாபாரத யுத்தத்தின்போது அர்ஜுன னுக்கு அருளிய கீதையின் சாரத்தை எனக்கும் உன் திருவாயினாலே கூறக்கூடாதா கண்ணா?'' என்று ஒருநாள் அவர் வேண்ட, கண்ணனும் உடன்பட்டான். அப்படிக் கண்ணன் கூறியதுதான் உத்தவகீதை.

இப்படி ஒரு பாக்கியம் படைத்த உத்தவரை அழைத்த இறைவன், ''என் பக்தன் ஒருவன் அதோ சந்திரபாகா நதியில் நீராடிக் கொண்டிருக்கிறான். திருமணம் ஆகி மிகப் பல ஆண்டுகள் கடந்தும் அவ னுக்குப் புதல்வன் இல்லை. அவனுக்கு நீ உடனடியாக மகனாக மாறு. வளர்ந்ததும் பக்தியைப் பரப்புவதில் நீ பெரும் பங்கு வகிக்க வேண்டும்'' என்றார்.

இறைவன் கட்டளையை உத்தவர் ஏற்றுக்கொண்டார். அடுத்தகணமே தாம் ஸேட்டி என்ற அந்த பக்தனின் அருகே ஒரு குழந்தை மெல்ல மிதந்து வந்தது. அதை வாரி எடுத்து முத்தங்கள் சொரிந்தார்



## அபங்க அமுதம் - 7

பாஹதா துஜே சரண ஹரலீ பவவ்யதா
புடதீ ஏக சிந்தா வாடதஸே
ஜணீ முக்திபத தேஸீ பாண்டுரங்கா
மகயா ஸந்தஸங்கா கோடே பாஹு
மகஹே பண்டரீ ஆனந்த ஸோஹளா
கவணாசே டோளா பாஹு தேவா
மக ஹே ஹரிகதா அம்ருத ஸஞ்ஜீவனீ
கவணாசே ச்ரவணீ ஏகோ தேவா
நாமா ம்ஹணே மஜ பண்டரீசீ ஸோய
அனந்த ஜன்ம ஹோய யாசி லாகீ

- நாமதேவர்

''பாண்டுரங்கா, உன்னுடைய பாத தரிசனம் பிறப்பு இறப்பு இல்லாமல் செய்கிறது என்றாலும் எனக்கு ஒரு கவலை உண்டாகிறதே! ஒருவேளை நீ எனக்கு முக்தி அளித்தால் இப்போது எனக்குள்ள உத்தமர்களின் நட்பை இழந்துவிடுவேனே! தவிர பண்டரிபுரத்தில் நடைபெறும் உற்சவங்களை எப்படிப் பார்ப்பேன்? அமுதமான உன் ஹரி கதையைக் கேட்க எனக்குக் காதுகள் இருக்காதே. எனவே எனக்குப் பண்டரிபுரமே போதுமானது. இங்கு கிடைக்கும் இந்தச் சுகத்துக்காக நான் உன்னிடம் எண்ணற்ற பிறவிகளை இங்கு யாசிக்கிறேன்.''

அவர். அன்று காலை தன் மனைவி குணாபாய், ''நமக்கென ஒரு குழந்தையை விட்டலன் அருளாமல் இருக்க மாட்டான்'' என்று கூறியதை நினைத்து, தாம்ஸேட்டிக்குச் சிரிப்பு வந்து விட்டது.

ஒரே நாளில் ஒரு குழந்தையைத் தந்தருளிய பாண்டுரங்கனை எண்ணி நெகிழ்ந்தார் தையற்காரரான தாம்ஸேட்டி.

அந்த பக்த குடும்பத்தில் ஜனித்த நாமதேவர், பாடல்களை இயற்றிப் பாடும் போது விட்டலனும் அதை நேரடியாகவே கேட்டு ஆனந்தப்பட்டிருக்கிறான். அவ்வளவு ஏன், நடனமும் ஆடி இருக்கிறான். நாமதேவர் தமது பிறப்பைப் பற்றியே கூட ஒரு அபங்கம் இயற்றியுள்ளார். அதில் பாண்டுரங்கன் 'அந்தக் குழந்தையின்' நாக்கில் ''இவன் எண்பது வயது வரை வாழ்வான். பலப்பல அபங்கங்களை இயற்றுவான்'' என்று எழுதியதாகச் சொல்கிறார் நாமதேவர்.

நாமதேவர் தாம் பிறந்த பன்னிரண்டாவது நாளே விட்டலன் குறித்துப் பாட, சுற்றியிருந்தவர்கள் வாய் பிளந்து நின்றனர்.

**விட்டல ஆலய முக்கிய வாயிலின் முதல் நான்கு படிகள் நாமதேவரின் பெயரால் அழைக்கப்படுகின்றன.**

ஆறு வயதுக் குழந்தையாக இருந்தபோதே, நாமதேவர் வாழ்வில் அற்புதங்கள் நடக்கத் தொடங்கி விட்டன.

படங்கள் : ஸ்ரீஹரி
சித்திரம் : வேதா



# டிரைவர் எங்கே?



''உங்க காருக்கு ஏன் டிரைவர் வெச்சுக்கலை?''

''டிரைவரை எங்கே போய் திருடறது!''

– சிக்ஸ் முகம்



''உன் பின்னாடியே யாரோ ஒரு பையன் சுத்தறானாமே! யாரும்மா அது?''

''தெரியலைப்பா! எதுக்கும் 'மிஸ்டு கால்' கொடுத்துப் பார்க்கட்டுமா?''

– ஜி.லட்சுமிபதி



''வாடகை கேட்க வந்த வீட்டு ஓனர் ஏன் தலைதெறிக்க ஓடுறார்..?''

''இப்படி தொந்தரவு பண்ணினால் வீட்டை வித்துதான் வாடகை கொடுக்க வேண்டி வரும்னு சொன்னேன்.''

– டி.அனுசுயா தேவி



''தலைவரே! உங்கள் விளக்கம் அருமை!''

''எதைச் சொல்றே?''

''முதல் நாள் நீங்க சொன்ன பொய்ச் செய்திக்கு அடுத்த நாள் விளக்கம் சொன்னீங்களே, அதைச் சொன்னேன்.''

– ஆர்.தங்கராஜ்

**ப**ஞ்சாப் மாநிலத்தில் அகாலிதளம் கட்சி வேட்பாளர்கள் பிரசாரத்துக்குச் சென்ற இடங்களில் எல்லாம் ஸ்வீட் விநியோகம்தான். அதுவும் எப்படி தெரியுமா? கட்சிக்காரர்கள் வேட்பாளரது எடைக்கு எடை லட்டு கொடுக்க, அதை அப்படியே கூடி இருக்கும் பொதுமக்களுக்கு விநியோகித்தார்கள்.

***(எங்க ஊர்ல ஹாட் கேஷ்தாங்கோ!)***

**அ**னோலா தொகுதியில் மேனகா காந்தியை எதிர்த்துப் போட்டியிட்ட தர்மேந்திர காஷ்யப் கிராமப்புறங்களில் குடிசைக்குள் நுழைந்து, ஒரு டம்ளர் தண்ணீரை வாங்கிக் குடித்துவிட்டு, "நீங்க குடிக்கிற அதே தண்ணியைத்தான் நான் இப்ப குடிச்சேன்! மினரல் வாட்டர் குடிக்கிற பெரிய இடத்துக்காரங்களுக்கு உங்க கஷ்டம் பத்தி என்ன தெரியும்? எனக்கே வோட்டுப் போடுங்க!" என்று வாக்கு சேகரித்தாராம்.

***(என்ன பிரயோஜனம்? ஜனங்க மேனகாவுக்கே வோட்டு போட்டு இவருக்கு 'தண்ணி' காட்டிட்டாங்களே)***

**கா**ங்கிரஸ் அனுதாபியான அனாருல் ஹேக் என்ற பெங்காலி விவசாயி இந்தத் தடவை காங்கிரஸுக்கு வோட்டுப் போடவில்லை. மேற்கு வங்காளத்துக்கு சோனியா பிரசாரத்துக்கு வந்த சமயத்தில், தன் கிராமத்திலிருந்து 40 கி.மீ. பயணித்து சோனியாவைக் காண வந்தவர், சோனியாவை கிட்டத்தில் காண விரும்பி மேடைக்கு அருகில் சென்றபோது, காங்கிரஸ் தொண்டர்களின் தள்ளுமுள்ளு காரணமாக நெருங்கவே முடியவில்லையாம். ஏமாற்றத்தில் அவர் எடுத்த முடிவுதான், காங்கிரஸுக்கு நோ வோட்டு!

***(எங்க ஊர்ல அம்மா கட்சியில மந்திரிங்களுக்கே அந்த நிலைமைதான்!)***

**இ**ந்த முறை தேர்தல் பிரசாரத்தின்போது மாயாவதியின் பேச்சு சூடாக இருந்தாலும், அவர் ரொம்பவே கூலாக இருந்தார். எப்படி? அவருக்காக ஏர்-கண்டிஷனர் இணைந்த பேச்சு மேடை (போடியம்) ஒன்றை வடிவமைத்து, அவர் சென்ற எல்லா கூட்டங்களுக்கும் கூடவே கொண்டு சென்று விட்டார்கள்.

***(தேர்தல் முடிவுக்குப் பின் எத்தனை ஏர்கண்டிஷனர் தேவைப் பட்டதோ?)***

**தே**ர்தலில் போட்டியிடும் பசையுள்ள வேட்பாளர்கள்தானே இங்கே வோட்டுக்காக ஏராளமாகப் பணம் கொடுக்கிறார்கள். ஹரியானாவில், குருக்ஷேத்திரா தொகுதியில் ஒரு முறை ஜெயித்து, மறுபடி போட்டியிட்ட தொழிலதிபர் நவீன் ஜிண்டல், கடந்த ஐந்தாண்டுகளில்

* சூடும்... குளிர்ச்சியும்




தம் தொகுதியில் திருமணம் என்று யார் பத்திரிகை கொடுத்தாலும், பெண் என்றால் 5001 ரூபாயும், ஆண் என்றால் 2001 ரூபாயும் மொய் அளிப்பது வழக்கம்.

***(தொகுதி மேம்பாட்டு நிதியில் கணக்கு எழுதிடுவாங்களோ?)***

"**ஏ**ன் வோட்டளிக்க

* மூன்றாவது இன்னிங்ஸ்

வில்லை?'' என்ற கேள்விக்கு வாக்காளர்கள் கூறிய காரணங்களின் பட்டியல்:

ஊரில் இல்லை (24%), உடம்பு சரியில்லை (14%), அடையாள அட்டை இல்லை (10%), ஆர்வமில்லை (6%), வன்முறை பயம் (1%), நல்ல வேட்பாளர் யாருமில்லை (1%), என் வோட்டை வேறு யாரோ போட்டு விட்டார்கள் (1%).

*(பணம் கொடுக்காததால் வோட்டுப் போடாதவங்க எவ்ளோ சதவிகிதம் சார்?)*

# 'தண்ணி' காட்டிட்டாங்க!

**த**ம் வாழ்க்கையில் அரசியல் பிரவேசம் மூன்றாவது இன்னிங்ஸ் என்கிறார் ஆந்திர மெகா ஸ்டார் சிரஞ்சீவி. ''முதல் இன்னிங்ஸ் ஒரு நடிகராக என்னை நிலை நிறுத்திக் கொள்ள நான் கஷ்டப்பட்ட காலம். இரண்டாவது இன்னிங்ஸ் ஒரு ஸ்டாராக ஒளிவிட்டுப் பிரகாசித்த காலம். மூன்றாவது இன்னிங்ஸ் எனக்குப் பிடித்திருக்கிறது'' என்கிறார்.

*(இங்கே சிவப்பு பேண்ட், மஞ்சள் சட்டை, கூலிங் கிளாஸ் போட்டுக்கிட்டு, ஹீரோயினோட டூயட் பாட முடியாது மிஸ்டர் சிரு!)*



* திருமண பந்தம்

# எதற்கும் விலை உண்டு!



ரங்கன் பெரிய ரவுடி. யூனியனில் செல்வாக்குள்ள நபர். எப்போதும் அவனால் பிரச்னை. ஆனால் அவனை ஒன்றும் செய்ய முடியாது. யூனியனின் துணை மற்றும் லோக்கல் ரவுடிகளின் சகவாசம்.

அப்படிப்பட்டவனை சூப்பர்வைஸர் சாந்தாபாய் கன்னத்துல அறைஞ்சுட்டாளாம். தொழிலாளர்கள் ரொம்ப கோபமா இருக்காங்க. கண்ட கண்டதை அடிச்சு நொறுக்கிட்டு இருந்தாங்க.

ஜன்னல் கண்ணாடி சிலுங்கென உடைந்து சிதறியது. மேனேஜர் பிரகாஷ் பதற்றத்துடன் கீழே இறங்கி வந்தார். கூட்டம் சேர்ந்திருந்தது.

''என்ன ஏகநாதன் கலாட்டா?''

எதிர்ப்பட்ட தம் உதவியாளன் ஏகநாதனை விசாரித்தார் மேனேஜர்.

''சார்... சாந்தாபாய் ரொம்ப சாது. அவளுக்கே கோபம் எனில் காரணம் வலுவாகத்தான் இருக்க வேண்டும்.''

''பெரியவர் எம்.டி.க்கு தெரிஞ்சால் சீறிப் பாய்வார். அவர் தொடர்பு கொள்வதற்குள் இதை நிறுத்தி ஆக வேண்டும்'' என்றார் பிரகாஷ்.

ஏகநாதன் மூச்சிரைக்க வந்தான்.

''பெரியவர் ஃபோனில் கூப்பிடறார்...!''

போச்சு. அதற்குள் எப்படி தெரிந்தது? பிரகாஷ் மிரண்டார்.

''பிரகாஷ் என்ன கலாட்டா? அடிச்சு நொறுக்கறாங்களாமே...? உடனே அவுங்களை நிறுத்து. சாந்தாபாயை மன்னிப்பு கேட்கச் சொல். ஒரு சின்ன பொருள் கூட உடையக் கூடாது!''

''எஸ் சார்!''

சாந்தாபாயைப் பார்த்தார் பிரகாஷ்.

## போஸ்ளர் சி.ரகுபதி

''என்ன சாந்தாபாய் இப்படிப் பண்ணிட்டீங்க?''

''கம்பெனி உள்ற மிஷின் பக்கத்துல நிக்கிறப்ப போதை ஏத்திக்கிட்டான். கஞ்சா வேறு அடிச்சான். நான் கேட்டதுக்கு கெட்ட வார்த்தை சொன்னான். தாங்க முடியலை. அறைஞ்சிட்டேன்!''

''பெரியவர் ஃபோன்ல கத்தறார். உங்களை உடனே மன்னிப்பு கேட்கச் சொன்னார்.''

சாந்தாபாயின் முகம் மாறியது. ''மாட்டேன். பெரியவரை வந்து நேரில் விசாரிக்கச் சொல்லுங்க. அவர் கோபப்படாம இருந்தா நான் மன்னிப்பு கேட்டுக்கிறேன்!''

அவள் தோளில் ஒரு கை விழுந்தது. சாந்தாபாய் பிரகாஷின் பிரியத்துக்கு உரியவளும் கூட!

''என்ன செய்யப் போறே சாந்தாபாய்?''

''யூனியனுடன் பேசினால் குழப்பு வாங்க. நேரா சண்டைக்காரன் காலில் விழுவது உத்தமம்!''

''கிண்டல் பண்ணாதே சாந்தாபாய்!''

''அதான் சொல்றேன். ரங்கன்கிட்ட நேராப் பேசுங்க. எல்லாத்துக்கும் ஒரு விலையுண்டு...!''

''என்ன சொல்றே...?''

''அவனோட மச்சினன் ஐ.டி.ஐ.ல படிச்சுட்டு வேலை இல்லாம சுத்தறானாம். அவனை உள்ளே இழுத்துப் போடுங்க...!''

பிரகாஷுக்குள் மின்னலடித்தது.

கூட்டத்தைப் பார்த்து ரங்கன் கூறினான். ''என்ன இங்க கலாட்டா... யாரோ வீண் புரளி கிளப்பியிருக்காங்க. என்னை அடிக்கிற தைரியம் அந்தப் பொம்பளைக்கு இருக்கா என்ன.. போய் வேலையைப் பாருங்க...!''

ரங்கன் நிதானமாக தன் செக்ஷன் நோக்கி நடக்க ஆரம்பித்தான். ●

## பாலிடிக்ஸ் போட்டி - 2 முடிவு

கல்கி 26.4.2009 இதழில் வெளியான பாலிடிக்ஸ் போட்டி - 2ல் கலந்து கொண்டு அசத்திய வாசகர்களுக்கு முதலில் நன்றியைத் தெரிவிக்கிறோம். சரியான விடையெழுதியவர்களில் குலுக்கல் மூலம் தலா ரூ.100/- பரிசு பெறும் வாசகர்களுக்கு வாழ்த்துகள். இதோ சரியான விடைகளும் பரிசு பெறுவோர் பட்டியலும்....

**சரியான விடைகள்:**

1. ஆ, 2. இ, 3. ஈ, 4. அ, 5. ஊ, 6. உ

**பரிசு பெறுவோர்:**

1. எஸ்.மீரான்முகைதீன், கிருஷ்ணாபுரம், 2. ஆர்.சரஸ்வதி, திருச்சி, 3. டி.கிருஷ்ணமூர்த்தி, காஞ்சிபுரம், 4. ஆர்.ராஜசேகரன், சென்னை-83, 5. கே.வெங்கடேசன்,வேலூர், 6. ஆரூர்.பாலநாதன், திருவாரூர், 7. சி.பி.செந்தில்குமார், ஈரோடு, 8. எம்.ஆர்.நந்தினி சுவாதி,வேலூர், 9. எ.முத்துக்குமரன், சிதம்பரம், 10. சி.ராஜ்குமார், சென்னை - 93.



**காருகுறிச்சி அருணாசலத்தை நாதசுரம் வாசிக்கச் சொல்லி பல மணி நேரம் சிவாஜி இசை வெள்ளத்தில் மூழ்கிக்கிடப்பதுண்டு.**

சிவாஜியின் பாராட்டு வேறெந்த விதத்திலும் வெளிப்படாது. சிவாஜி முழுமையாக லயித்துக் கேட்கிறார் என்பதே தங்கள் வித்வத்துக்கான விலை மதிப்பற்ற பாராட்டு என்பதை, அந்தப் பிறவிக் கலைஞர்களும் புரிந்து கொண்டிருந்தார்கள்.

'கலையை மட்டுமல்ல; காண்கிற ஒவ்வொன்றையும் உள்வாங்குவதில் சிவாஜி கணேசன் மன்னாதி மன்னன். ஒரு குழந்தையின் அசைவுகளையும் குறும்புகளையும் மற்றவர்கள் ரசிக்கிறபோது, சிவாஜி அந்தக் குழந்தையின் தன்மையை உள்வாங்கிக் கொண்டிருப்பார்' என்கிறார் முத்துமாணிக்கம்.

இது ரசனையின் அடுத்த நிலை. கண்ணில் காண்கிற அபூர்வமான அம்சம் கலையாய் - படைப்பாக்கமாய் - புதிய அவதாரம் கொள்வதற்கான நிலை இது.

புகழின் சிகரத்திலிருக்கும் சிவாஜி போன்றவர்கள், புறவுலகில் எப்போதும் எச்சரிக்கையாகவே இருக்க நேரிடும். யாரிடம் என்ன பேசுகிறோம், எதிரிலிருப்பவர் என்ன சொல்கிறார் என்றெல்லாம் விழிப்புடன் இருப்பதே அவர்களுக்குப் பாதுகாப்பு. ஆனால், தன்னுடைய ஆருயிர் நண்பர் முத்துமாணிக்கம் அருகிலிருந்தால், இயல்பாகவும் பாதுகாப்பாகவும் உணர்வார் சிவாஜி. தன் இயல்பு நிலையின் தளர்வு நிலையை அடைந்து, உறக்கத்தில் ஆழ்ந்து, மெல்லிய குறட்டைகூட வந்துவிடும். தோழரின் பாதுகாப்பான கண்காணிப்பும் இருப்பதால் பிறக்கிற நிம்மதி இது.

இந்த நட்பின் காரணமாக அடிக்கடி பொள்ளாச்சி பகுதிக்கு வந்து போனதில், கொங்கு மக்களின் பரிபூரண அன்பில் திளைத்தார் சிவாஜி. 'சிவாஜி வந்து போனார்' என்று சொல்பவர்களோ, பொதுவாக நடிகர்களைச் சொல்வதுபோல் 'அவன் இவன்' என்றோ பொள்ளாச்சி வட்டத்தில் சிவாஜியைச் சொல்பவர்களே கிடையாது. 'மச்சான் வந்திருந்தார்', 'மாமா வந்திருந்தார்', அண்ணன் வந்திருந்தார்' என்று உரிமைபொங்க உறவுமுறை



## சிவாஜி த சுப்ரீம் பாஸ்

சொல்லித்தான் ஒவ்வொருவரும் குறிப்பிடுவார்கள்.

**வே**ட்டைக்காக சிவாஜி இங்கே வருகிற விஷயம் நாடெங்கும் பரவத் தொடங்கியது. சிவாஜியின் வேட்டை அனுபவங்களை நேரடியாகக் கண்டு தன் வாசகர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பிய தினத்தந்தி நாளிதழ், தம் செய்தியாளர்



7

# சிவாஜியிடம் நடித்த மான்



களையும் புகைப்படக்காரர்களையும் ஒருமுறை உடன் அனுப்பியிருந்தது. அப்போது வேடிக்கையான ஒரு சம்பவம் நடந்தது. அந்த வேட்டையில் ஒரு மானை சிவாஜி சுட்டதும் அது சுருண்டு விழுந்தது. உடனே விழுந்த மானுக்கருகே சிவாஜியையும் முத்துமாணிக்கத்தையும் நிறுத்தி பத்திரிகையாளர்கள் புகைப்படம் எடுத்தனர். அடுத்த வேட்டையைத் தேடி உள்ளே சென்றுவிட்டுத் திரும்பி வந்து பார்த்தால், விழுந்து கிடந்த மானைக் காணோம். அடிபட்டு மயங்கி விழுந்த மான் உண்மையில் சாகவில்லை. இவர்கள் உள்ளே போன கொஞ்ச நேரத்தில் உணர்வு பெற்று எழுந்து ஓடிவிட்டது. சுட்டவர்களைப் போலவே மானும் போஸ் கொடுத்து விட்டுப் போயிருக்கிறது.

அந்த மகத்தான கலைஞன் விரும்பும் தனிமையை அந்த கிராமத்து மக்கள் மனமுவந்து தந்தார்கள். எந்தக் கட்டுக்களுமின்றி சேத்துமடையில் சுதந்திரமாக நடமாடும் சிவாஜி, 'சேத்துமடைதான்

**மரபின்மைந்தன் முத்தையா**



**‘பார்த்தா பசுமரம் படுத்துவிட்டா நெடுமரம்’ என்ற பாடலை சிவாஜி அடிக்கடி முணுமுணுப்பார்.**

என்னுடைய கவிட்சர்லாந்து’ என்று அடிக்கடி சொல்வார்.

இங்கு வந்து இறங்கியவுடனே கொங்கு பாஷை அவருடைய நாவில் சரளமாய் விளையாடும். ‘மக்களைப் பெற்ற மகராசி’ படத்தில் அவர் முழுக்க முழுக்க கொங்கு பாஷை பேசி நடித்ததும் இந்தத் தாக்கத்தால்தான்.

அவர் வந்து இறங்கிவிட்டால் சேத்து மடையில் தினந்தோறும் திருநாள்தான். வேளா வேளைக்கு போட்டி போட்டுக் கொண்டு, எல்லோரும் விருந்துக்களைப் பார்கள். முத்துமாணிக்கத்தின் மாளிகை யில் மூன்று வேளையும் அசைவ உணவு கமகமக்கும்.

சேத்துமடையிலும் சரி, சென்னை அன்னை இல்லத்திலும் சரி, அனைத்து வகை அசைவ உணவுகளையும் செய்யச் சொல்வார் சிவாஜி. அவர் சாப்பிடுவ தென்னவோ குறைவுதான். ஆனால் அனை வரையும் சாப்பிடச் சொல்லி அதில் நிறைவு காண்பது அவரின் இயல்பு.

இடியாப்பம்- பாயா, கருவாடு, மற்ற மீன்வகை உணவுகள் சிவாஜிக்கு மிகவும் பிரியமான ரகங்கள். உற்சாகமான மனநிலையில் பாடிக் கொண்டும் இருப் பார் அவர். அடிக்கடி அவர் முணு முணுக்கிற பாடல்கள் இரண்டு. ‘தூக்குத் தூக்கி’ படத்தில் வருகிற ‘குரங்கிலிருந்து பிறந்தவன் மனிதன்’, ‘திருவிளையாடல்’ படத்தில் வருகிற ‘பார்த்தா பசுமரம் படுத்துவிட்டா நெடுமரம்’ ஆகிய பாடல் கள் அவை.

ஒரு முறை தோட்டத்திலுள்ள நீர்நிலை ஒன்றில் மீன்வேட்டை நடந்தது. செங்கண் அவுரிமீன் விறால்மீன் அளவுக்குப் பெரி தாக இருக்கும். அது பெரும்பாலும் நீரின் மேல்மட்டத்திலேயே மிதக்கும். அதைக் குறிபார்த்துச் சுடுவார்கள். சுட்ட மாத்தி ரத்தில் தண்ணீருக்குக் கீழே மீன் போய் விடும். அதற்கு முன் உள்ளே குதித்து அதைப் பிடிக்க வேண்டும். அதற்காக மலசன்கள் (ஆதிவாசி இனத்தவர்) சுற்றி நின்று கொண்டிருந்தார்கள். சுட்ட மாத்தி ரத்தில் குதிக்கச் சொல்லி உத்தரவு வந்ததும் குதித்தவர்களில் ஒரு மலசன் மூழ்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. விஷய மென்னவென்றால் அந்த மனிதனுக்கு நீந்தத் தெரியாது. குதிக்கச் சொன்னார்கள் என்பதற்காக சற்றும் யோசிக்காமல் உடனே குதித்துவிட்டான் அந்த மலசன். அப்புறம் மீனை விட்டுவிட்டு அந்த மலசனைத் தூக்க வேண்டியதாய்ப் போயிற்று. இந்த விசுவாசத்தை ரொம்ப நாட்களுக்கு வியந்து சொல்லிக்கொண்டி ருந்தார் சிவாஜி.

(தொடரும்)

# நீங்கள் கேட்டவை - தராசு

● எம்.செல்லையா, சாத்தூர்.

? சிவகாசி தொகுதியில் பலமுறை வெற்றிகண்ட வைகோவால் இன்று வர முடியவில்லையே, என்ன காரணம்?

! வோட்டுப் பிரிவதையும் கடந்து அவர் வெற்றிபெறும் அளவுக்கு வைகோவின் கொள்கையும் பிரசாரமும் அமையவில்லை என்பதே இதற்குக் காரணம். ஈழத் தமிழரிடம் அனுதாபம், அவர்களுக்குச் சம உரிமை என்பது வேறு; தனி ஈழம் - அதற்கான ஆதரவு என்பது வேறு என மக்கள் நன்றாக உணர்ந்திருக்கிறார்கள்.

● என்.காளிதாஸ், சிதம்பரம்

? தேர்தலில் தில்லுமுல்லு செய்யவே மின்தடை ஏற்படுத்தியிருக்கலாம் என்று ஜெயலலிதா சந்தேகம் தெரிவித்துள்ளாரே?

! "மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு" என்றார் அண்ணா. தேர்தலில் தோற்றதற்கு, தங்கள் கொள்கை, அணுகுமுறை, செயல்பாடு ஆகியன சரியாக இல்லாததுதான் காரணம் என்று யாருமே ஒப்புக்கொள்ள மாட்டார்கள். இது மனித இயல்பு. "வாக்காளர்களின் தீர்ப்பை ஏற்கிறேன்" என்று கூற அசாதாரணமான வலிமை வேண்டும். அது இன்றைய நம் தலைவர்களிடம் இல்லை.



சரிபாராத...



...சறுக்கல்!

## கமலுக்கு வோட்டு இல்லையாமே?

● ஆர்.மாதவராமன், கிருஷ்ணகிரி

? கொலை வழக்கில் ஆயுள் தண்டனை பெற்ற சரவண பவன் ராஜகோபாலுக்கு உச்சநீதிமன்றம் ஜாமீன் வழங்கியுள்ளதே?

! நிரபராதி ஒருவர், தவறியும் தண்டிக்கப்பட்டுவிடக் கூடாது என்ற அடிப்படையில் வகுக்கப்பட்டுள்ளன நீதிமன்ற நடைமுறைகள். சில சந்தர்ப்பங்களில் இது குற்றவாளிகளுக்கே கூட சாதகமாக அமைந்துவிடுகிறது. என்றாலும், வாய்மையே வெல்லும்; நீதி நிலைக்கும்.

● ரேவதிப்ரியன், ஈரோடு.

? ''உங்களது ஒரு தாலிக்காக ஒரு லட்சம் பேர் தாலியை அறுத்து விட்டீர்களே!'' என்று சோனியாவை பாரதிராஜா வசைபாடுவது சரியா?

! அநாகரிகம் என்பதோடு, தர்க்கரீதியாகச் சரியில்லை; அவதூறும் கூட. பிரபாகரன் செய்த குற்றம் ராஜீவ் காந்தி கொலை மட்டுமல்ல; அது போலவும் வேறு பலவிதங்களிலும் ஏராளமான குற்றங்களைப் புரிந்திருக்கிறார். பஞ்ச் டயலாக்கெல்லாம் சினிமாவில் கூட லாஜிக் இல்லாமல் எடுபடாது.



* எடுபடாத பஞ்ச்!

● **எம்.இராஜேந்திரன், லால்குடி**

**? கமல்ஹாசனுக்கு வோட்டு இல்லையாமே?**

! அதைவிட விசித்திரம் - தினம் தினம் பண்பலையில் ''வோட்டுப் போடுங்க, வோட்டுப் போடுங்க!'' என்று ஜனநாயகக் கடமையைத் தொண்டை கிழிய நினைவூட்டிய மிர்ச்சி சுசித்ராவுக்கு வோட்டு இல்லை. நிர்வாகத் தவறுதான் என்றாலும், வோட்டுப் பட்டியலைக் காலாகாலத்தில் சரி பார்த்திருக்க வேண்டும். அதற்கு வாய்ப்பும் நேரமும் தரப்பட்டன.

● **பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

**? தேர்தல் அன்று பொது விடுமுறை விடுவது சரியல்ல என்ற கருத்தை ஏற்கிறீர்களா?**

! மிக அதிகமான ஜனத்தொகை உள்ள நம் நாட்டில், வரிசையில் நீண்ட நேரம் நிற்க அவசியம் ஏற்படக்கூடும். எனவே சம்பளத்துடன் கூடிய விடுமுறை வழங்குவதுதான் நல்லது. மறுநாள் காலை, விரலில் அடையாளம் இல்லையெனில் அந்த விடுமுறையை லீவாகக் கருதி பதிவுசெய்யும் உரிமை நிர்வாகத்துக்கு இருக்க வேண்டும்.

● **அ.யாழினி பார்வதம், சென்னை-78**

**? காங்கிரஸ் கூட்டணி ஜெயித்த போதும் ப.சிதம்பரம் தோற்றது ஏன்?**



* நடைமுறை நீதி

! நீங்கள் இப்படி ஒரு கேள்வியை எழுதி அனுப்புகிற அளவுக்கு சிவகங்கை தொகுதி வோட்டு எண்ணிக்கையில் குழப்பமும் சந்தேகமும் நிலவியிருக்கிறது. ஒரு வழியாக மயிரிழை வோட்டு வித்தியாசத்தில் ப.சிதம்பரம் ஜெயித்தபோதிலும் அதில் பெருமை சிறிதும் இல்லை. அவசரம் அவசரமாக கலைஞரைச் சந்தித்து, பொன்னாடை போர்த்தியதில் சிறுமை நிறைய உண்டு.

● **கே.நல்லுச்சாமி, சின்னமனூர்.**

**? தேர்தல் பற்றிய சுவையான தகவல் எதுவும் உண்டா?**

! தேர்தல் பணியில் அமர்த்தப்பட்ட ஏராளமான அரசு ஊழியர்கள் தங்கள்



❑ **ரூ. 150/- பரிசு பெறுபவர்:**

**எம்.செல்லையா, சாத்தூர்**

வாக்குச்சாவடிக்குச் சென்று வோட்டுப் போட இயலாமல் போய்விட்டது என்கிற முரண்பாடுதான்! இவர்களுக்கு தபால் மூலம் வாக்குப் பதிவுசெய்ய வசதியை முன் கூட்டியே ஏற்பாடு செய் திருக்கலாம்.

● அ.சுஹைல் ரஹ்மான்,
திருச்சி-21

? தேர்தல் முடிந்த பிறகு, வேட்பாளர்களின் சொத்து விவ ரங்களைச் சரிபார்க்க வருமான வரித் துறை முடிவு செய்துள்ளது பற்றி?

! வருமான வரித்துறையிடம் அல் லது தேர்தல் கமிஷனிடம் தப்புக் கணக்கு தந்திருந்தால் தோற்றுப் போனவர்கள் மீது ஒருவேளை அதிகாரிகள் பாயலாம்; ஆனால் ஜெயித்து வந்தவர்கள் மீது கை வைக்க மாட்டார்கள்!

● டி.வி.ராமமூர்த்தி, சென்னை-119

? இந்திய அரசியலின் சீரழிவுக்கு, தமிழகத்தின் பங்கு மிகவும் பிரதான மானது என்ற தமிழருவி மணியனின் கருத்து தராசுக்கு ஏற்புடையதா?

! அரசியலில் நல்லது கெட்டது எப் போதுமே இருந்ததுண்டு. ஆனால், கட்சி யைக் குடும்பச் சொத்தாகவும் அரசியலை லாபம் கொழிக்கும் வியாபாரமாகவும் உரு மாற்றிய பெருமையை, வடக்கே இந்திரா காந்தியும் தெற்கே கருணாநிதியும் சம மாகப் பங்கிட்டுக் கொள்கிறார்கள்.

● எல்.மோஹனசுந்தரி,
கட்டிகானப்பள்ளி

? ஒரு மனிதனுக்கு எப்போது பாதுகாப் பின்மை ஏற்படுகிறது?

! அறம் பிறழும் போது.

● எஸ்.ராமசாமி, வடக்கு
தயிர்பாளையம். ★

? பா.ம.க.வுக்கு வாக்களித்தால் தமிழகத்துக்கு ஏற்படவிருக்கிற நூறு


★ நூற்றியொன்றாவது நன்மை


★ இல்லாத மனவலிமை

நன்மைகளைப் பட்டிய லிட்டார் அன்புமணி. ஐந்து ஆண்டு கள் மத்திய அமைச்சராக இருந்தபோது இவற்றையெல்லாம் செய்திருக்கலாமே...?

! நூறு நன்மைகளையும், அக்கட்சி வென்றால் ஏற்படக்கூடிய சில தீமைகள் விழுங்கி ஏப்பம் விட்டு விடும் என்பதை உணர்ந்ததால், பா.ம.க.வைத் தோற்கடிப் பது நூற்றியொன்றாவது நன்மையென மக்கள் கருதிவிட்டார்கள் போலும்!

● கு.அருணாசலம், தென்காசி

? இலங்கைத் தமிழர்களுக்கு குரல் கொடுக்கும் அரசியல் கட்சிகள், பெங்களூ ரில் கோணிச் சாக்கில் சிறைப்பட்டிருக்கும் அய்யன் திருவள்ளுவர் சிலையின் 'விடுதலை'க்காக ஒட்டுமொத்தக் குரல் கொடுப்பது எப்போது?

! இரண்டு நிகழ்வுகளையும் ஒப்பிடுதல் சிறிதும் சரியல்ல. வள்ளுவர் சிலைக்காக நாம் நிறையவே குரல் கொடுத்திருக் கிறோம். ஆனால், "அது போதாது; இன்னா செய்தார் நாண நன்னயம் செய்தல் வேண்டும்" என்பதை கோணிச் சாக்கில் மறைந்திருக்கும் சிலை உணர்த்துகிறது!

**★ ரூ. 75/- பரிசு பெறுபவர்:**
**எஸ்.ராமசாமி,**
**வடக்கு தயிர்பாளையம்**



# சாட்சியங்களின் அழுகை!

''ஹாய் சசி! என்ன சீரியஸான யோசனை?'' என்று யாழினி முனுசாமி உசுப்பியதும், ராஜாஜி காலக் கதையி லிருந்து ராகுல் காலத்துக்கு மீண்டாள் சசி. சசியைப் போலவே முனுசாமியும் குடியின் அராஜகத்தை நேரடியாக அனுபவித்தவன். கைரேகை கரையும் வரை கைகுலுக்கும் தோழனாக அவன் தோன்றியதற்கும் 'குடி'யின் மீது அவனுக்கிருக்கும் கோபம்தான் காரணம். அவனை அடையாளம் காட்டியது ஒரு இலக்கியக் கூட்டம். இதுநாள் வரை குடியைத் தொடாத இலக்கிய நண்பர் மணிமேகலை நாகலிங்கம் அக்கூட்டத்தை ஏற்பாடு செய்திருந்தார். 'நானும் எனது கவிதையும்' என்ற தலைப்பில் தனது எந்த அனுபவம் அல்லது ஒரு விஷயம் கவிதையாக மாறியது என்பதைச் சொல்லி பின் கவிதை வாசிக்க வேண்டும் என்ற திட்டமிடலில் நடந்தது. பலரும் பல விஷயங்களைச் சொல்லி, 'கவிதையை நான் இப்படி செய்தேன்(?)' என்று விளக்கினர். இறுதியாக வந்த கவிஞர் யாழினி முனுசாமி, வாழ்விலிருந்து கவிதையை நகலெடுத்த சம்பவம் சொன்னார்:

''ஒரு திருமண நிகழ்ச்சியில் என் சித்தப்பா மதுபான பார்ட்டியில் பங்கேற்றார். 'அதிகமா குடிச்சும் வாந்தி எடுக்காம சும்மா டில்லி மாதிரி டல்லாகாம இருக்கிறவன்தான் ஆம்பிள... ஆயிரம் ரூபா பந்தயம்'னு ஒரு போட்டி. மூன்றாவது சுற்றில்




எதிராளிகள் வாந்தி எடுத்து வாபஸ் வாங்கினர். தனது ஆண்மையை ஆல்கஹால் மூலம் ஐந்தாவது சுற்று வரை நிரூபித்து ஜெயித்தார் சித்தப்பா. நிகழ்ச்சி முடிந்தபின் நீண்ட நேரம் ஆகியும் எழுந்திருக்காத அவரை எழுப்பிய போதுதான் தெரிந்தது, அவர் வாழ்வு குடியில் மூழ்கி மூச்சுத்

திணறிப் போயிருந்தது. அவர் வாழ்வு ஆல்கஹாலிடம் தோற்றுப் போயிற்று. சித்தப்பா மட்டுமல்ல; எனது அப்பாவும் குடியிடம் மண்டியிட்டு மரணம் குடித்த வர்தான்.

எனக்கும் அப்பாவுக்கும் குடியாலேயே சண்டை வரும். கொடிய வறுமையிலும் என் வாழ்வு கொடி படர தனது வாழ்க்கைத் தேரை எனக்காக நிறுத்தியவள் என் அம்மா. அவள் எனது பாரி. அம்மா வியர்வையில் சேமித்து வைப்பதை எடுத்து அப்பா சாராயத்தில் செலவழித்துக் கொண்டிருப்பார்'' என்று சொல்லி முடித்துவிட்டு தனது கவிதையை வாசிக்கத் துவங்கினான் யாழினி முனுசாமி.

* யாழினி முனுசாமி

''குடியைத் தவிர்த்து
உன்னை மட்டும் எழுத
ஒருவரியும் கிடைக்கவில்லை
நிலம், பாத்திரங்கள்
அம்மாவின் தாலி
ஏன், காமாட்சி விளக்கும்
தூக்கலசமும் கூடத் தப்பவில்லை
உன் குடிவாய்க்கு
ஒரு மதியப் பொழுதில் விழுந்து
கிடந்தாய்
வாயில் ஈ மொய்க்க.
குடித்துத் தீர்த்திருந்தது
குடி உன்னை.
இப்போதெல்லாம்
குடித்து விழுந்து கிடப்பவரைக்
கண்டால்
பதைக்கிறது மனசு''

- என்று வாசித்து முடித்திருக்கையில் அவன் கண்கள் குளமாகியிருந்தன. அப்போதே சசி தீர்மானித்தாள்- 'என் செல்ல அப்பாவின் வாயில் ஈக்கள் மொய்க்க ஒருபோதும் அனுமதிக்க மாட்டேன்.'

**"அம்மா வியர்வையில் சேமித்து வைப்பதை எடுத்து அப்பா சாராயத்தில் செலவழித்துக் கொண்டிருப்பார்!"**

அந்த யாழினி முனுசாமிதான் இப்போது சசியை உசுப்பியவன். பரஸ்பர நலம் விசாரிப்புக்குப் பின், யுகமாயினி சித்தனைச் சந்திப்பது பற்றி சொல்லி முடித்து அசோக் நகர் பூங்காவுக்கு அப்பாவை அழைத்துக் கொண்டு செல்ல ஆயத்தமானாள் சசி.

மாலைப் பொழுது. வாழ்க்கையை ரீசார்ஜ் செய்துகொள்ள பலர் வாக்கிங்கில்

இருந்தனர். பூங்கா செடிகளிடமிருந்து கொஞ்சம் சுத்திகரிக்கப்பட்ட காற்றைச் சுவீகரித்துக் கொண்டிருந்தனர் சிலர். கட்டிடங்களிலிருந்து கழன்று வந்து இயற்கையுடனான தன் ஆதிஞாபகத்தை மீட்டெடுத்தபடி அமர்ந்திருந்தனர் இன்னும் சிலர். அப்பாவின் விரல்களைத் தன் விரல்களுடன் சங்கிலியாய்ப் பிணைத்திருந்தாள் சசி. எதிரே பத்திரிகை ஆசிரியரும் எழுத்தாளருமான யுகமாயினி சித்தன், நாவலின் முதல் வரியைத் துவக்கத் திணறும் பாவனையில் இருந்தார். பிரதிபலிக்காத மனம், ஒழுகுகிற ஓட்டை கூரை வீட்டுக்கு ஒப்பானது. அது முறையான புகலிடமாகாது என்பார் புத்தர். சித்தன் தன் வாழ்வில் 'குடி' கொண்ட தருணத்தைப் பிரதிபலிக்க வந்திருந்தார்.

* சித்தன்



**"எழுத்தாளனா, ஓவியனா, இயக்குநரா இருந்த நான், குடி நோயாளியாகவும் சில காலம் இருக்க வேண்டியிருந்தது!"**

"சசிம்மா! பிரபலமான இலக்கியப் பத்திரிகையான கணையாழியில உதவியாசிரியர் பிரசாத்தாக இருந்த நான், சன் டீ.வி, விஜய் டீ.வி.யில பிரபலமான வெற்றிகரமான தொடர்களைக் கொடுத்தேன். போலீஸ் டைரி, நீலாம்பரி, மந்திர வாசல் பகுதி-2, பஞ்சமி இதெல்லாம் என்னோட உழைப்பின் வெகுஜன ஊடக அடையாளம். சுபமங்களாவில் என்னோட ஓவியமும் தொடர்ந்து வரும். எழுத்தாளனா, ஓவியனா, இயக்குநரா இருந்த நான், குடி நோயாளியாகவும் சில காலம் இருக்க வேண்டியிருந்தது. பத்து வருட குடிப்பழக்கம். ஒண்ணு தெரிஞ்சுக்க... குடிகாரர் வேற, குடி நோயாளி வேற. குடிகாரனா இருந்த நான், குடி நோயாளியா மாறிட்டேன். நான் ஒரு நோயாளிதான்னு உணர ஆரம்பிச்சதும் விஜய்நாகஸ்வாமிகிட்ட கவுன்சிலிங்குக்குப் போனேன். 'என்னை யாரோ உளவு பார்ப்பதுபோல, என்னைப் பற்றியே ஏதோ பேசுவது போல தோன்றுவது, நெருங்கியவர்களையும் சந்தேகத்தோடு பார்ப்பது, குடித்தால்தான் எந்தக் காரியத்தையும் செய்ய முடியும் என்கிற நிலைமை எல்லாவற்றையும் சொன்னேன். எனக்கு மனநிலை பாதிப்பு ஏற்பட்டுள்ளதோ என்ற ஐயம் எழுந்துள்ளதைச் சொன்னேன். அவரோ இவையெல்லாம் குடி நோயின் அறிகுறிகள் என்றார். 'அப்படியா... என்னை அழிக்கும் இந்தக் குடியை இன்றே இப்போதே விட்டு விடுகிறேன்' என்றேன்.

அதற்கு டாக்டர் விஜய்நாகஸ்வாமி சிரித்துக் கொண்டே, 'அப்படியெல்லாம் நீ நெனச்ச உடனே நிறுத்திட முடியாது' என்றார். "

ஏன்?

(தொடரும்)

**எச்சரிக்கை :** குடியால் நரம்பு தளர்வதும், தசை சீரழிவதும் உண்டாகி, உடலுறவில் பிரச்னை ஏற்பட்டு தலை குனிவு ஏற்படுவதும், அதனை மறைக்க இன்னும் குடித்து சுயநிலை இழப்பதும் நிகழும். பின் மனைவியைச் சந்தேகப்பட்டு தன் இயலாமையை வன்முறையால் மூட முயல்வர். கூடவே கல்லீரலும் தன் செயல்பாட்டை மெல்ல இழந்து விடும் சூழல்தான் தற்கொலைக்கான ஏழாவது தவணை.

# தேவை தெளிவு!

-புதுவை சந்திரஹரி



''சுகுணா, இங்கே பாருடி... என்ன கடிச்சதுன்னே தெரியலே... ராத்திரியிலேயிருந்து தோள் பட்டையிலே அரிச்சுகிட்டே இருக்கு...'' சேகர் கூறவும், மனைவி சுகுணா,

''காட்டுங்க'' என்று பார்த்தாள்.

சேகரின் வலது தோள் பட்டையில் ஒரு முந்திரிப் பருப்பு அளவுக்கு வீக்கமும் சிராய்ப்பும் இருந்தன.

''ஒண்ணுமில்லே, பூச்சி ஏதோ கடிச்சிருக்கு, இந்த க்ரீம் தடவுங்க'' என்று மருந்து டியூபைக் கொடுத்தாள்.

''உறுத்திக்கிட்டேயிருக்கே... சட்டை பட்டா கூட எரியுது.''

கணவன் ஏதாவது ஒன்று என்றால் இப்படித்தான் புலம்புவான் என்பதையறிந்த சுகுணா,

''அடடா, அதான் மருந்து தடவினீங்க இல்லே... சரியாயிடும் படுங்க'' என்றாள்.

அன்று இரவு மறுபடியுமா இப்படி நடக்க வேண்டும்?

படுத்திருந்தவன் 'ஓ'வென்று அலறி எழுந்தான்.

விளக்கைப் போட்டுப் பார்க்கையில், தேள் ஒன்று அவனது காலில் கொட்டிவிட்டுச் சென்று கொண்டிருப்பது தெரிந்தது.

தேளை அடித்துவிட்டு, இரவே கணவனை மருத்துவமனைக்கு அழைத்துச் சென்றாள் சுகுணா.

அவசர சிகிச்சைப் பிரிவில், ஊசி போட்டு, மருந்து தடவி காலில் ஒரு சிறு கட்டு போட்டு மாத்திரை மருந்து கொடுத்து அனுப்பினார்கள்.

அடுத்த நாள் முழுவதும் தேள் கொட்டிய வலியைப் புலம்பிக்கொண்டே, காலைப் பார்த்துப் பார்த்துத் தடவிக் கொண்ட இருந்தான் சேகர்.

இரண்டு நாள் ஆகி, கட்டுப் பிரித்தும், இலேசான வீக்கமும் வலியும் இருக்கவே, அதையே பார்த்துப் புலம்பியபடியே இருந்தான். அப்போது யதேச்சையாக வலது தோள் பட்டையை அவனது இடதுகை தடவியபோது,

''அட... என்ன இது? பூச்சிக்கடி காய்ந்து போய் வீக்கமே இல்லையே!'' என்று கூறவும், மனைவி சுகுணா,

''பெரிய பிரச்னை வந்தா சின்ன பிரச்னையை மறந்திடறோம். நமக்கு ஏதாச்சம் பிரச்னை இருந்துகிட்டே இருக்கணும். ஒரு பிரச்னை வரும்போது அதைச் சந்திச்சிட்டு மறுபடி ஃப்ரீயா ஆயிடணுங்க. நம்ம வேலைகளைப் பார்க்கணும். அப்பத்தான் மனசும், உடம்பும் சந்தோஷமா நிம்மதியா இருக்கும். அப்படி இருந்தாத்தானே நம்மோட கடமைகளை நாம சரியா செய்ய முடியும்? மனசைப் போட்டுக் குழப்பிக்காம நம்ம கட்டுப்பாட்டுல வைக்கணுங்க.''

சேகர் தெளிவு பெற்றுப் புன்னகைத்தான்.

**எளிமை - தத்ரூபம்**

**ரா**ஜேஷ்குமாரின் 'நட்பே, நட்பே' மனதைத் தொட்டது. காமராஜரின் எளிமையைச் சொல்லும் ஓவியமும் தத்ரூபம்.

- ஜே.துரைராஜ், சென்னை

**ஆர்த்தி - ஆரத்தி**

**கா**மெடி என்றாலே டபுள் மீனிங்தான் என்றாகிவிட்ட இக்காலத்தில், ''டபுள் மீனிங் காமெடிக்கு ஒரு போதும் ஒத்துக்க மாட்டேன்'' என்று சொல்லும் நடிகை ஆர்த்தியை, ஆரத்தி எடுத்து பாராட்டணும்ங்க!

- வே.ந.கதிர்வேல், வேலூர் - 6

**சதாசிவம் - எம்.எஸ்**

**ப**ழக்காரர் கொடுத்த பழங்களை காளிதாஸ் சன்மானைவிட உயர்ந்ததாகக் கருதிய சதாசிவம் - எம்.எஸ். தம்பதிகளின் படித்த மனம் பாராட்டுக்குரியது.

- ஜே.துரைராஜ், சென்னை

**வருத்தம் - தீர்வு?**

**சு**விஸ் வங்கியில் முடங்கிய இந்தியப் பணத்தைக் கொண்டு வராவிட்டால் வருங்கால சந்ததி முன் அவமானத்தில் தலை குனிய நேரும் என்ற பேராசிரியர் ஆர்.வைத்தியநாதன் வருத்தத்தை, ஜெயித்த தலைவர்கள் தீர்ப்பார்களா?

- அ.யாழினி பர்வதம், சென்னை-78

**வேடிக்கை - வாடிக்கை**

**வே**டிக்கை பார்க்கும் நம்மவர்களின் மனத்தை அப்படியே படம் பிடித்துக் காட்டி இருந்த ஜெயபாஸ்கரனுக்குப் பாராட்டுகள்.

- எஸ்.உமாதேவி, திருவண்ணாமலை

**சூப்பர் - ரிலாக்ஸ்**

**ஜா**லி ஸ்டோர்ஸ் பகுதியில் தண்ணீரில் மிதக்கும் குழந்தையின் ரிலாக்ஸ் டச் சூப்பரோ சூப்பர்...

-எம்.மிக்கேல்ராஜ், சாத்தூர்

# நட்பின்



### வேகா - லேகா

பசங்க திரைப்படத்தில் சோபிக் கண்ணுவாக நடித்தவர் வேகா; லேகா அல்ல!

- சு.ஸ்ரீகாந்த், நெய்வேலி




### ஆண்டவன் வாக்கு

பிரதிபலன் கருதா சேவையே சிறந்த சேவை என சங்கராச்சார்ய சுவாமிகள் கூறும் 'அருள்வாக்கு' ஆண்டவன் வாக்கு.

- வி.எஸ்.கீர்த்தனா,
ஈரோடு-11

### கல்கியின் வெற்றி

தவணைமுறை தற்கொலை பகுதியில் கல்கி வெளியிடும் கருத்துகளைப் படித்து ஒரு குடிகாரராவது குடியை விட்டொழித்தால் அது கல்கிக்கு மாபெரும் வெற்றி தான்.

- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு

### ராகிங் ஆறுதல்

+2 ரிசல்ட்டுக்குப் பின் மெலிதான பயத்துடன் இருக்கும் மாணவர்களுக்கு ஆறுதலாக இருந்தது ராகிங்குக்கு எதிரான ஆர்.கே.ராகவனின் வார்த்தைகள்!

-எம்.ஜி.பரத், திண்டுக்கல்

### சுமை இல்லை

ஜனாதிபதி பிரதிபா பாட்டீலின் பொறுப்பு என்ன என்று தலையங்கத்தில் அழகாகக் குறிப்பிட்டு இருந்தீர்கள். காங்கிரஸ் அதிக அளவில் வெற்றி பெற்று விட்டதால் அவருக்கு சுமை அதிகம் இல்லை.

- பி.கோவிந்தசாமி,
ஊத்தங்கரை

### ராகுல் நேரம்

நீர் ராகு(ல்) காலம் என கவர் ஸ்டோரி போட்ட நேரம், அவருக்குத்தான் காங்கிரஸ் வெற்றியில் பங்கிருந்திருக்கிறது என்பதை, தேர்தல் முடிவுகள் காண்பித்து விட்டனவே!

- ரேவதிப்ரியன், ஈரோடு

### முத்தான விளக்கம்

பாசமலர் படத்தின் கடைசிக் காட்சிக்கு, முத்துமாணிக்கம் கொடுத்தது அருமையான விளக்கம்.

- கே.வி.ராமன், சென்னை-73

### மகிமை - அருமை

நரஹரியின் அகக் கண் திறந்து அபங்க கீதங்கள் நமக்குக் கிடைத்தது அந்த பாண்டுரங்கன் மகிமைதான்!

- பி.ஹேமாம்புஜம், சென்னை - 17

# 'ஜில்' ரெஸிபி



கோடையில் கூலாக ட்ரஸ், மேக்கப் போட்டால் மாத்திரம் போதாது; கூலாகச் சாப்பிடவும் தெரியவேண்டியது அவசியம். ஹெல்த்தியாகச் சாப்பிட வேண்டும். ''ஐஸ்க்ரீம், கோக், பெப்ஸி, மிராண்டா... என கப் கப்பா பாட்டில் பாட்டிலா ஜில்லுன்னு உள்ளே தள்றோமே'' என்று பேசுவதை நிறுத்திவிட்டு, கீழ்வரும் ஜில்ஜில் ரெஸிபிகளை கிச்சனில் புகுந்து பிரயோகிக்கவும். வெரி ஈஸி, டேஸ்ட் அமர்க்களம்! நீங்களும் சாப்பிடுங்க. மம்மி-டாடிக்கும் கொடுங்க. (உடல், உச்சி என சகலமும் குளிர்ந்து பாக்கெட் மணியை குபீர்னு ஏத்திடுவாங்க!)

சம்மரில் ஃப்ரூட் சாலட், லஸ்ஸி, நிம்புபானி (எலுமிச்சை ஜூஸ்), நீர் மோர், காய்கறி சாலட்... என வெரைட்டியாக சுவீகரம் பண்ணினால், என்ன வெயிலாக இருந்தாலும் உடலுக்குள்ளே ஒரு சின்ன ஊட்டி உட்கார்ந்திருக்கும். ஓ.கே... இனி ரெஸிப்பிகளைப் பார்ப்போம்...

**வாட்டர்மெலன் சாலட்:**

வாட்டர்மெலன் - 1, நன்றாகக் கழுவிய பிறகு பொடியாக நறுக்கிய புதினா - 1 டேபிள் ஸ்பூன், சிறிது லைம் ஜூஸ், மிளகுத்தூள் கொஞ்சம், உப்பு - ஒரு சிட்டிகை.

முதலில் வாட்டர்மெலனை (தர்பூசணி) நறுக்கவும். இதில் சீட்ஸ் மற்றும் வெள்ளைப் பகுதியை கவனமாக நீக்கி விட்டு சிவப்புப் பழத்தை மாத்திரம் அழகாக நறுக்கி ஒரு கிண்ணத்தில் போடவும். மேலாக லைம் ஜூஸ் விட்டுச் சிறிது உப்பு+பெப்பரைத் தெளிக்கவும். இனி புதினா இலைகளை நாலாபுறமும் ஸ்ப்ரே செய்யவும். அப்புறமென்ன ரெடி டு ஈட்...

**ஜிஞ்சர் ஃப்ரூட் சாலட்:**

**தேவையான பொருட்கள்:**

ஆரஞ்சு - 2, ஆப்பிள் - 2, ஸ்ட்ராபெர்ரி - 1 கப், ஃப்ரெஷ் தயிர் - 1 கப், நாட்டுச் சர்க்கரை - 2 டேபிள் ஸ்பூன், துருவிய இஞ்சி - ½ ஸ்பூன்

எல்லாப் பழங்களையும் நன்றாகக் கழுவி க்யூப் க்யூபாக நறுக்கி ஒரு சர்விங் பவுலில் போடவும். இனி தயிர் + சர்க்கரை + இஞ்சியை ஐந்து நொடி மிக்ஸியில் போட்டு ஓட்டி, பழக்கலவை மீது க்ரியேட்டிவாகக் கொட்டவும். ஃப்ரிட்ஜில் வைத்து ஜில்லென்று சாப்பிடவும். (தயிரில் ஃப்ளேவர்ட் வரும்; வெனிலா, பீச் யோகர்ட் என. அது கிடைத்தால் சூப்பர்)

உள்ளே

**கோக்கனட் கேவ்ரா ட்ரிங்க்:**

**தேவையானவை:**

இளநீர் - 4 கப்,
தேங்காய் வழுக்கை - 4 டேபிள் ஸ்பூன்,
கேவ்ரா சிரப் - 4 டேபிள் ஸ்பூன்,
ஐஸ் (க்ரஷ் பண்ணியது) - தேவையான அளவு.

ஐஸைத் தவிர்த்து மற்ற எல்லாப் பொருட்களையும் ப்ளெண்டரில் ஓட்டவும். டால் கிளாஸில் ஊற்றி மேலாக ஐஸ் துகள்களை ரசனையுடன் தூவவும்.

குடிப்பதற்கு ரெடி!

**மேங்கோ லஸ்ஸி:**

**தேவையானவை:**

நல்ல கெட்டித் தயிர் - 1 கப்,
மாம்பழக் கூழ் - ½ கப்,
க்ரஷ்ட் ஐஸ் - 1 கப்,
சர்க்கரை - 3 டேபிள் ஸ்பூன்

எல்லாப் பொருட்களையும் மிக்ஸியில் போட்டு ஒரு நிமிடத்துக்கு ப்ளெண்ட் செய்யவும். ரொம்ப திக்காக இருந்தால் கொஞ்சமாக தண்ணீர் சேர்க்கவும். டால் க்ளாஸில் ஊற்றி ஜில்லான மேங்கோ லஸ்ஸியைப் பருகவும்.

**மேங்கோ ட்ரிங்க்**

**தேவையானவை**

மாங்காய் - 4,
தண்ணீர் - 3 கப்,
சர்க்கரை - 3 டீஸ்பூன்,
உப்பு - 1 ஸ்பூன்,
வறுத்துப் பொடி செய்த
சீரகத் தூள்- 1 டீஸ்பூன்,
மிளகாய்த் தூள் - சிறிதளவு,
புதினா நறுக்கியது - 3 டீஸ்பூன்

**செய்முறை :**

முதலில் மாங்காயை முழுதாக குக்கரில் வேகவைத்து எடுக்கவும். ஆறிய பிறகு தோலை உரித்து கூழாக ஒரு பாத்திரத்தில் போடவும். இனி எல்லாப் பொருட்களையும் ஞாபகமாகச் சேர்த்து மிக்ஸியில் ப்ளெண்ட் செய்யவும். பெரிய ஜக்கில் ஊற்றி நன்றாக சில்லென்று ஆன பிறகு பருகவும். மிக மிக ஹெல்த்தியானது மேங்கோ ட்ரிங்க்!

**- லதா சேகர்**





# கிரேஸியைக் கேளுங்கள்

● அ.யாழினி பர்வதம், சென்னை

**வாடகை வீட்டுக்கும் வாஸ்து பார்ப்பது அவசியமா?**

பெண்டாட்டிக்குத்தான் தாலி கட்ட வேண்டும்!

● சரஸ்வதி, ராமனாதபுரம்

**'கொன்றால் பாவம் தின்றால் போச்சு'... எப்படி புரியலையே?**

இது புரிய இரண்டு புராணம் தெரிந்திருக்க வேண்டும். சிறுத்தொண்ட நாயனாரிடம் சிவபெருமான் பிள்ளைக் கறி கேட்ட பெரிய புராணம். பூர்வாஸ்ரமத்தில் சிறுத்தொண்ட நாயனார் நரசிம்ம பல்லவனின் படைத் தளபதி பரஞ்சோதியாக இருந்து, வாதாபி படுகொலைக்குக் காரணமாக இருந்ததைக் கூறும் கல்கி புராணம் சிவகாமியின் சபதம். பரஞ்சோதியாகக் கொன்ற பாவம் சிறுத்தொண்ட நாயனாராகப் பரிமாறிய பிள்ளைக் கறியை சிவன் தின்றதால் போச்சு. ''அதனால என்ன சாப்பிட்டா போச்சு'' என்று நாம் சொல்வதில்லையா, அதுபோல ''தின்றால் போச்சு'' என்று அரன் திருவிளையாடல் செய்ய, 'பிள்ளைக் கறி' உயிர்பெற்று 'பிள்ளைக் கனி'யாகத் தவழ்ந்தது. அறுபத்து மூன்று நாயன்மாரில் சிறுத்தொண்டரை சிவபெருமான் செலக்ட் செய்த காரணம், வாதாபியில் உயிரிழந்த பிள்ளைகளின் பெற்றோர்கள் அனுபவித்த புத்திர சோகத்தை, பரஞ்சோதி அலையஸ் சிறுத்தொண்ட நாயனாருக்குப் புரியவைப்பதற்கு. 'நின்று கொல்லும் தெய்வம்' இங்கு 'தின்று கொன்றது பாவத்தை'.

● எம்.அசோக்ராஜா, திருச்சி

**பறக்கும் சக்தி நமக்கு வந்து விட்டால் என்ன ஆகும்?**

தூக்கிலும் போட முடியாது; தூக்கிப் போடவும் முடியாது.

● வி.ஜி.சத்தியநாராயணன், நங்கநல்லூர்

**அழகு மட்டும் ஏன் இதயத்தைக் கவர்கிறது....?**

அழகு Art. இதயம் Heart. ஆர்ட் ஹார்ட்டைக் கவர்வதில் என்ன ஆச்சரியம்!

● வாசுதேவன், அயிரோலி

**கனவு காண்பது, கண்ணாடியில் காண்பது... ஒப்பிடுக.**

## பறக்கும் சக்தி

கண்ணைத் திறந்து கொண்டு காண்பது கண்ணாடியில்; கண்ணை மூடிக் கொண்டு காண்பது கனவில். கண்ணாடி நம்மைப் பிரதிபலிக்கும்; கனவில் நாம் மற்றவர்களைப் பிரதிபலிக்கிறோம். ஆக கனவில் நாம்தான் கண்ணாடி.

● ஆர்.அஜிதா, கம்பம்

**உங்களின் சொத்து மதிப்பு....?**

அவ(மனைவி) மதிப்பு!

● ஷைலஜா, பெங்களூர்

**எது சொர்க்கம்...எது நரகம்...?**

ரம்பை-மேனகையாகட்டும், ரவா-

நடக்கறப்பவே சில மனுஷங்களைக் கையில பிடிக்க முடியல... பறக்க ஆரம்பிச்சா அவ்வளவுதான்

கேசரியாகட்டும், தானாய் வந்தால் சொர்க்கம். திணிக்கப்பட்டால் நரகம்....!

● வி.ஆனந்த கிருஷ்ணன், சென்னை

***நாய் வித்த காசு குரைக்குமா....?***

குறைச்ச விலைக்கு வித்தா குரைக்கும். கையையும் கடிக்கும்!

# வந்தால்...

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

***உங்கள் மீது யாராவது 'ஷூ'வை எறிந்தால் எப்படி சமாளிப்பீர்கள்?***

ஏதாவது 'சாக்ஸ்' சொல்லிச் சமாளிப்பேன்....!

● வீரபத்திரன், திருவண்ணாமலை

***எது சுகமான சுமை....?***

உறங்கும்போது உடம்பு!

● எம்.மிக்கேல் ராஜ், சாத்தூர்

***ஸ்லிம்மான தமன்னா, கொழுக் மொழுக் நமீதா இருவரில் யாரை உங்களுக்குப் பிடிக்கும்....?***

'நமதமீன்னா'!

● ரமா, நெல்லை

***IPL கிரிக்கெட் மேட்சுகளில் கவர்ச்சி நடனமாடும் இளம் பெண்கள் பற்றி...?***

அவர்கள் ஆடையும் 20-20 ஆக இருக்க வேண்டுமா? கிரிக்கெட் பாஷையில் EXTRA - COVERச்சி..!

● அனன்யா, திருச்சி

***இரேஸியாருக்கு 'விரதம், இரதம்' இருக்கும் பழக்கமுண்டா....?***

'விரதம்' இருக்க ஜாக்'கிரதம்' வேண்டும்.

கவுன்சிலர் படிக்கிற காலேஜ்...

# கிங்கு இஸ் சங்கு!

''வேற யாருக்கும் இல்லாத பெருமை எங்களுக்கு இருக்கு. அப்படி யென்ன அலட்டல்னு கேக்கறீங்களா? இது கவுன்சிலர் படிக்கிற இடங்க. அட நெசந் தாங்க. எங்களோட எம்.எட். படிக்கிற மாணவி தீபா கவுன்சிலருங்கோ. அந்தப் பொறுப்புகளையும் கவனிச்சிட்டு, இங்க வந்து பாடமும் படிக்கிறாங்க...'' என்று நிறுத்தாமல் பொரிகிறார்கள் திருச் செங்கோடு விவேகானந்தா கல்வி நிறுவனங்களில் பி.எட்., எம்.எட் கல்வி இயல் படிக்கும் மாணவி கள். அவர்களைக் கேட்டால், ஜிலு ஜிலு டிப்ஸுக்கு பஞ்சமிருக்காதுன்னு... ரவுண்டு கட்டி கூலாக்கி, ''அம் மிணிங்களா கத்திரி வெயில்ல வெளிய காய்ஞ்சு தவிக்கும் ஜீவன்களுக்கெல்லாம் கொஞ்சம் உங்க ஜில் ஜில் ஜிலீர் டிப்ஸை அள்ளி விடுங் கம்மா'' என்றோம்... அவ்வளவுதான் பொரிஞ்சு சே...சே... குளிர்ந்து தள்ளிட் டாங்கல்ல!

**ஜிலு ஜிலு 1:** ''கொஞ்சம் கம்பு சாதம். முதல் நாளே செய்து நன்றாக உருட்டி, ஆற வைத்து, மண்பானையில் சின்ன வெங்காயத்துடன் இரவெல்லாம் ஊற வைத்து அடுத்த நாள் காலையில் உப்பு, தயிர் சேர்த்துச் சாப்பிட, அடடா உடம்பே ஐஸ் பெட்டி மாதிரி ஆயிடுங்கோ'' என்ற னர் உருத்ராதேவி, சாந்தி இருவரும்.

**ஜிலு ஜிலு 2:** ''இந்த வெயிலுக்கு வயிற்றுப் பொருமலும், அடிவயிறு வலி யும் கட்டாயம் வருமுங்கோ? வெந்தயம், சீரகம், ஓமம் மூன்றையும் வெறும் வாணலியில் வறுத்துப் பொடி செய்து, பனங்கற்கண்டைச் சேர்த்து கொதிக்க வைத்துக் குடிக்க உங்கள் பொருமல், செருமல் போயே போச், போயிந்தி, இட்ஸ் கான்'' என்றனர் ஷாலினியும், வினோதினியும், சரண்யாவும், சுபத்ராவும். படிக்கிற பொண்ணுங்க படையலுக்கு வெக்கிறா மாதிரி இப்படி பட்டபடார்னு 'ஜில்' டிப்ஸ் கொடுத்து கூலாக்குதேன்னு பார்த்தா மறுநொடியே சில எஸ்.எம்.எஸ். ஜோக்குகளைச் சொல்லி சூடாக்கினார்கள்.

வாழைப் பழத்தை சீப்பா வாங்கலாம். ஆனால், சீப்பை வாழைப்பழமா வாங்க முடியுமா?

நீ வி.ஐ.பி. பனியன் போடலாம். ஆனால் வி.ஐ.பி. உன்னோட பனியனைப் போடுவாரா?

பஸ் டிரைவருக்கும், கார் டிரைவருக்கும் லைசென்ஸ் வேணும். ஆனால், ஸ்குரு டிரைவருக்கு லைசென்ஸ் தேவையா?

புலியை நீ அடிச்சா நீதான் கிங்கு. ஆனா புலி உன்னை அடிச்சா உனக்கு நிச்சயம் சங்கு.

வாசலைக் கூட்டி கோலத்தைப் போடலாம். ஆனால் கோலத்தைக் கூட்டி வாசல் போட முடியுமா?...




''ஏய்... ஸ்டாப்! ஸ்டாப்! நீங்கதான் இப்படி... உங்க மேடம்...'' என வம்புக்கு இழுக்க... ''ஸார் எங்க கல்லூரி முதல்வர் டாக்டர் மௌலாதேவியே ஒரு பன்முக சாதனை யாளருங்கோ. எங்களுக்கு ரோல் மாடலே அவங்கதானே'' என்றார்கள் கோரஸாக.

''கல்லூரி விளையாட்டுப் போட்டி - 200 கிலோ பைக். அதை எங்க பி.டி.மாஸ்டர் முருகன் ஓட்ட, எங்க முதல்வர் பின்னால் உட்கார்ந்து கொள்ள, முதல்வர் தோளில் 400 கிலோ எடை அளவில 4, 5 பேர் தொங்கினோம்'' என்று முதல்வர் புகழ்பாடி மூச்சடைக்க வைத்தனர்.

தொகுப்பு : ஆர். பாலா





# ராஜாதி ராஜா

**பா**தை மாறி நடக்கும் தம்பிகளுக்குப் பாடம் புகட்டும் அண்ணனின் கதைதான் ராஜாதி ராஜா. அண்ணன் ராஜாவாக லாரன்ஸும், தம்பிகளாக யுகேந்திரன், பிரேம்சாய், போஸ் வெங்கட்டும் நடித்துள்ளனர்.

ஃப்ளாஷ்பேக் காட்சியில் வரும் ராமு, சைதை சைலஜாவாக வரும் மும்தாஜ் நடிப்பில் அதிகம் ஸ்கோர் வாங்குகின்றனர். தங்கப்பழமாக வரும் மீனாட்சி, லாரன்ஸை காட்சிக்குக் காட்சி ரகளை பண்ணுகிறார். போதாக்குறைக்கு போட்டி போட்டுக் கொண்டு ஸ்னிக்தாவும், காம்னா ஜெத்மலானியும்.

'காளையை அடக்கினா யானையைக் கொடுக்கிற...

'உடல் மண்ணுக்கு உயிர் சைதைக்கு...' என ஆங்காங்கே வசனங்கள் நம் தலையைச் சுற்ற விடுகின்றன.

'ஆண்டிப்பட்டி அரசம்பட்டியும்...'. 'யாரோ ஒருவன்' பாடல்கள் சுமார் ரகம்.

லாரன்ஸ் பஞ்ச் வசனங்கள் பேசும்போது தியேட்டரே விழுந்து விழுந்து சிரிக்கிறது. கனல் கண்ணனின் சண்டைக் காட்சிகளில் சரவெடி, மனுஷர் தூள் கிளப்புகிறார்... ஒளிப்பதிவு பரவாயில்லை.

கஷ்டப்பட்டுப் படிக்கும் மூன்று தம்பிகளும் தடம்மாறிப் போவதற்கான காரணங்கள் சொல்லப்படவேயில்லை, தம்பிகளைத் திருத்துவதற்குப் பதிலாக அவர்களைச் சாகடித்திருப்பது நெருடல். படம் முழுக்க வரும் உடை பற்றாக்குறை காட்சிகளைக் குறைத்திருக்கலாம்! மற்றபடி இந்தக் கோடையில் நம்மைக் கொஞ்சம் கலகலப்பாக்க வந்திருக்கிறார் இந்த ராஜாதி ராஜா!

– ப்ளாக்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 09 -11 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 09 - 11* Registered as a Newspaper in Srilanka.

www.vasaneyecare.org



# உங்கள் பார்வைக்காக எப்பவும்
# நாங்க இருக்கோம்



## அதிநவீன நுண்துளை கண்புரை அறுவை சிகிச்சை (MICS)
## Micro Incision Cataract Surgery

- உலகத்தரமான கண் சிகிச்சை
- உலகத்தரமிக்க சிகிச்சைக் கருவிகள்
- 200க்கும் மேற்பட்ட வல்லுனர்கள்
- 2000 மருத்துவ பணியாளர்கள்
- 30க்கும் மேற்பட்ட கண் மருத்துவமனைகள்
- அனைவருக்கும் ஏற்ற கட்டணத்தில்



vasan eye care
Hospital
ENHANCING VISION

**சென்னை**

• சைதாப்பேட்டை - பஜார் ரோடு • அண்ணாநகர் - 3வது அவென்யூ
• குரோம்பேட்டை - GST ரோடு • வடபழனி - ஆற்காட் ரோடு
• திருவான்மியூர் - L.B. ரோடு • மடிப்பாக்கம் - மஹாலிங்கம் தெரு
• பெரம்பூர் - பேப்பர் மில் ரோடு.

**24×7 Call Centre : 044- 43400000**

**THE VASAN EYE CARE HOSPITAL NETWORK:**

**TAMIL NADU :** TRICHY | SALEM | ERODE | DHARMAPURI | MADURAI | TUTICORIN | KUMBAKONAM | TANJORE | COIMBATORE **KERALA:** COCHIN | CALICUT | TRIVANDRUM | KANNUR | KOTTAYAM | THRISSUR **KARNATAKA:** DHARWAD | BELGAUM | HUBLI **ANDHRA PRADESH:** TIRUPATI | NELLORE **OPENING SOON AT:** TIRUNELVELI | HOSUR | VELLORE | PONDICHERRY | PALAKKAD | KOLLAM | BANGALORE | MANGALORE | MYSORE | VIJAYAWADA | VISAKAPATNAM | HYDERABAD

# இந்தியாவில் ஈடு இணையற்ற முதல் இடம்